| | | | | |
|---|---|---|---|---|
| முதற் பதிப்பு | 1922 | ... | தலைப்பு, | தேசியப் பாடல்கள் |
| இரண்டாம் பதிப்பு | 1934 | ... | ,, | ,, |
| மூன்றாம் பதிப்பு | 1942 | ... | | தமிழன் இதயம் |
| நான்காம் பதிப்பு | 1944 | ... | ,, | ,, |
| ஐந்தாம் பதிப்பு | 1946 | ... | ,, | ,, |
| ஆறாம் பதிப்பு | 1948 | ... | ,, | ,, |

விலை ரூ. 3—8—0




Muthukumaran Press, 8-99 Ammon Koil St, Madras 1.

“திலகர் விதைத்த வித்து பாரதியாக முளைத்தது.
காந்தி தூவின விதை நாமக்கல் கவிஞராகத் தோன்றியது.

—ராஜாஜி

“பலே, பாண்டியா! பிள்ளை!
நீர் ஒரு புலவன் ஐயமில்லை”
பிள்ளைவாள் நீர் நம்மை ஓவியத்தில் தீட்டும்,
நாம் உம்மைக் காவியத்தில் தீட்டுவோம்”

—மகாகவி பாரதியார்.

## நாமக்கல் கவிஞரின் இதர நூல்கள் —



- தமிழன் இதயம்
- மலைக் கள்ளன்
- பிரார்த்தனை
- இசைத் தமிழ்
- கவிஞன் குரல்
- அவளும் அவனும்
- சங்கொலி
- அரவணை சுந்தரம்
- இலக்கிய இன்பம்
- ஆரியராவது திராவிடராவது



# "கத்தியின்றி ரத்தமின்றி"

இந்தப் பிரசித்தி பெற்ற பாட்டுத்தான் நாமக்கல் கவிஞரைத் தமிழ் மக்களுக்கு அறிமுகப்படுத்தி வைத்தது. இதனுடன் இணைந்திருக்கும் சரித்திரம் எல்லோருக்கும் நன்கு தெரிந்த விஷயமாகும்.

---

கத்தியின்றி ரத்தமின்றி
யுத்தமொன்று வருகுது
சத்தியத்தின் நித்தியத்தை
நம்பும்யாரும் சேருவீர் (கத்)

ஒண்டி அண்டிக் குண்டுவிட்டு
உயிர்பறித்த லின்றியே
மண்டலத்தில் கண்டிராத சண்டை
யொன்று புதுமையே (கத்)

குதிரையில்லை யானையில்லை
கொல்லும் ஆசையில்லையே
எதிரியென்று யாருமில்லை
எற்றும் ஆசையில்லதாய் (கத்)

கோபமில்லை தாபமில்லை
சாபங்கூறல் இல்லையே
பாபமான செய்கை யொன்றும்
பண்ணுமாசை யின்றியே (கத்)

கண்டதில்லை கேட்டதில்லை
சண்டையிந்த மாதிரி
பண்டைசெய்த புண்ணியம்
பலித்ததே நாம்பார்த்திட (கத்)

காந்தியென்ற சாந்தமூர்த்தி
தேர்ந்துகாட்டும் செந்நெறி
மாந்தருக்குள் தீமைகுன்ற
வாய்ந்ததெய்வ மார்க்கமே (கத்)

# கவிதை வரிசை

# தமிழன் இதயம்

தமிழன் என்றொரு இனமுண்டு
தனியே அவற்கொரு குணமுண்டு
அமிழ்தம் அவனுடை மொழியாகும்
அன்பே அவனுடை வழியாகும்.

அறிவின் கடலைக் கடைந்தவனும்
அமிர்தம் திருக்குறள் அடைந்தவனும்
பொறியின் ஆசையைக் குறைத்திடவே
பொருந்திய நூல்கள் உரைத்திடுவான்.

கவிதைச் சுவைகளை வடித்தெடுத்தான்
கம்பன் பாட்டெனப் பெயர் கொடுத்தான்
புவியில் இன்பம் பகர்ந்தவெலாம்
புண்ணிய முறையில் நுகர்ந்திடுவான்.

'பத்தினி சாபம் பலித்துவிடும்'
பாரில் இம்மொழி ஒலித்திடவே
சித்திரச் சிலப்பதி காரமதை
செய்தவன் துறவுடை ஓரரசன்.

சிந்தா மணி, மணி மேகலையும்
பத்துப் பாட்டெனும் சேகரமும்
நந்தா விளக்கெனத் தமிழ்நாட்டின்
நாகரி கத்தினை மிகக்காட்டும்.

## தமிழன் இதயம்

தேவா ரம்திரு வாசகமும்
திகழும் சேக்கி ழார்புகழும்
ஓவாப் பெருங்கதை ஆழ்வார்கள்
உரைகளும் தமிழன் வாழ்வாகும்

தாயும் ஆனவர் சொன்னதெல்லாம்
தமிழன் ஞானம் இன்னதெனும்
பாயும் துறவுகொள் பட்டினத்தார்
பாடலும் தமிழன் பெட்பெனலாம்

நேரெதும் இல்லா ஊக்கமுடன்
நிமிர்ந்திட அச்சம் போக்கிவிடும்
பாரதி என்னும் பெரும்புலவன்
பாடலும் தமிழன் தரும் புகழாம்

கலைகள் யாவினும் வல்லவனும்
கற்றவர் எவர்க்கும் நல்லவனும்
நிலைகொள் பற்பல அடையாளம்
நின்றன இன்னும் உடையோனும்.

சிற்பம் சித்திரம் சங்கீதம்
சிறந்தவர் அவனினும் எங்கேசொல்
வெற்பின் கருங்கல் களிமண்போல்
வேலைத் திறத்தால் ஒளி பண்ணும்.

உழவும் தொழிலும் இசைபாடும்;
உண்மை; சரித்திரம் அசைபோடும்
இழவில் அழுதிடும் பெண்கூட
இசையோ டழுவது கண்கூடு.

## தமிழன் இதயம்

யாழும் குழலும் நாதசுரம்
யாவுள தண்ணுமை பேதமெலாம்
வாழும் கருவிகள் வகை பலவும்
வகுத்தது தமிழெனல் மிகையலவாம்

கொல்லா விரதம் பொய்யாமை
கூடிய அறமே மெய்யாகும்
எல்லாப் புகழும் இவைநல்கும்
என்றே தமிழன் புவி சொல்லும்.

மானம் பெரிதென உயிர்விடுவான்
மற்றவர்க் காகத் துயர்படுவான்
தானம் வாங்கிடக் கூசிடுவான்
‘ தருவது மேல் ’ எனப் பேசிடுவான்.

ஜாதிகள் தொழிலால் உண்டெனினும்
சமரசம் நாட்டினில் கண்டவனும்
நீதியும் உரிமையும் அன்னியர்க்கும்
நிறைகுறை யாமல் பண்ணினவன்.

உத்தமன் காந்தியின் அருமைகளை
உணர்ந்தவன் தமிழன் பெருமையுடன்
சத்தியப் போரில் கடனறிந்தான்
சாந்தம் தவறு துடனிருந்தான்.

# யாராலே?

சூரியன் வருவது யாராலே?
சந்திரன் திரிவது எவராலே?
காரிருள் வானில் மின்மினிபோல்
கண்ணிற்படுவன அவை என்ன?
பேரிடி மின்னல் எதனாலே?
பெருமழை பெய்வது எவராலே?
ஆரிதற் கெல்லாம் அதிகாரி?
அதைநாம் எண்ணிட வேண்டாமோ!

தண்ணீர் விழுந்ததும் விதையின்றி
தரையில் முளைத்திடும் புல் எது?
மண்ணிற் போட்டது விதையொன்று
மரம்செடி யாவது யாராலே?
கண்ணில் தெரியாச் சிசுவையெல்லாம்
கருவில் வளர்ப்பது யார்வேலை?
எண்ணிப் பார்த்தால் இதற்கெல்லாம்
ஏதோ ஒருவிசை இருக்குமன்றோ!

எத்தனை மிருகம்! எத்தனை மீன்!
எத்தனை ஊர்வன பறப்பன பார்!
எத்தனைப் பூச்சிகள் புழுவகைகள்!
எண்ணத் தொலையாச் செடிகொடிகள்!

## தமிழன் இதயம்

எத்தனை நிறங்கள் உருவங்கள்!
எல்லா வற்றையும் எண்ணுங்கால்
அத்தனை யும்தர ஒருகர்த்தன்
யாரோ எங்கோ இருப்பதுமெய்.

அல்லா வென்பார் சிலபேர்கள்
அரன் அரி யென்பார் சிலபேர்கள்
வல்லான் அவன்பர மண்டலத்தில்
வாழும் தந்தை என்பார்கள்
சொல்லால் விளங்கா 'நிர்வாணம்'
என்றும் சிலபேர் சொல்வார்கள்
எல்லா மிப்படிப் பலபேசும்
ஏதோ ஒருபொருள் இருக்கிறதே!

அந்தப் பொருளை நாம் நினைத்து
அனைவரும் அன்பாய்க் குலவிடுவோம்
எந்தப் படியாய் எவர் அதனை
எப்படித் தொழுதால் நமக்கென்ன?
நிந்தை பிறரைப் பேசாமல்
நினைவிலும் கெடுதல் செய்யாமல்
வந்திப் போம் அதைவணங்கிடுவோம்
வாழ்வோம் சுகமாய் வாழ்ந்திடுவோம்.

# நெஞ்சொடு இரங்கல்

பல்லவி

ஒருநாளைக் கொருதரம்
ஒருநொடிப் பொழுதேனும்
உன்னைப் படைத்தவனை
எண்ணிச் சுகித்ததுண்டோ?—மனமே!

சரணம்

திருநாளும் தேரும் என்று தேடியலைந்ததல்ல
சிந்தனை அலையாமல் த்யானத்தில் நிறுத்தியே (ஒரு)

அனுபல்லவி

விடியுமுன் விழித்தனை
வெளுக்குமுன் வீட்டைவிட்டாய்
வெவ்வேறு இடத்துக்கு
வௌவால்போல் ஓட்டமிட்டாய்
உடலும் மனமும் சோர்ந்து
ஓய்ந்திட வீடுவந்தும்
உண்ணும் பொழுதுங்கூட
எண்ணம் நிலைப்பதில்லை. (ஒரு)

அரைக்காசுக் காணும்
ஒருநாள் முழுதுங்காப்பாய்
ஆயிரம் பேரையேனும்
அலுப்பின்றிப் போய்ப் பார்ப்பாய்

## தமிழன் இதயம்

உரைப்பார் உரைகட் கெல்லாம்
உயர்ந்திடும் செல்வனை
உன்னுள் இருப்பவனை
எண்ணிட நேரமில்லை. (ஒரு)

சிலநாளைக் கதிகாரம்
செய்யும் ஒருவர்க்கஞ்சி
செய்யச் சொல்வதை யெல்லாம்
செய்வாய்நீ பல்லைக்கெஞ்சி
பலநாளும் ஜென்மமெல்லாம்
பாலிக்கும் அதிகாரி
பரமனை நினைக்கவும்
ஒருகணம் உனக்கில்லை. (ஒரு)

நாளும் கிழமை' யென்று
நல்லவர் உரைத்தாலும்
'நாளைக்கு ஆகட்டும்
வேலை அதிகம்' என்பாய்
பாழும் பணத்தைத்தேடி
படும்பாடு கணக்கில்லை
பகவானை எண்ணமட்டும்
அவகாசம் உனக்கில்லை. (ஒரு)

# சக்தி தோத்திரம்

பல்லவி

சக்தி எனக்கே அருள்வாய்—பரா
சக்தியென் தாயுனை நித்தமும் தொழுதனன் (சக்தி)

சரணம்

பக்தியொ டுந்தனைப் பணிந்திடல் மறந்தேன்
பாரினிற் சுகமெல்லாம் நீயெனத் தெரிந்தேன்
இத்தின முதலுந்தன் இணையடி புரிந்தேன்
இனிமேற் பிணியில்லை கவலைகள் துறந்தேன். (சக்தி)

நோய்களைத் தடுத்திட நுண்ணிய அறிவும்
நொந்தவர் தங்களைக் காத்திடப் பரிவும்
மாய்வதைக் குறைத்திட மருந்துகள் முறிவும்
மந்திர தந்திர மணியவை தெரியும். (சக்தி)

கல்லினுங் கட்டுடைய தேகம் எனக்கருள்வாய்
காலனை ஜெயித்திடும் கருணையும் தருவாய்
சொல்லிலும் செயலிலும் தூய்மையைத் தருவாய்
சோம்பலை யோட்டிநற் சுகமெனக் கருள்வாய் (சக்தி)

புண்ணிய பாபமெந்தன் இச்சையிற் கடந்து
பூதங்கள் ஐந்துமென் சொற்படி நடந்து
எண்ணிய யாவுமெந்தன் இஷ்டப்படி முடிய
ஈன்றவளே உந்தன் அருள்வரத் தடையோ. (சக்தி)

# முருகன் பாட்டு

முருகனென்ற சிறுவன்வந்து
முணுமுணுத்த சொல்லினால்
முன்னிருந்த எண்ணம்யாவும்
பின்னமுற்றுப் போனதே.
அருகுவந்து மனமுவந்து
அவனுரைத்த ஒன்றினால்
அடிமையென் மனத்திருந்த
அச்சமற்றுப் போனதே

இளமையந்த முருகன்வந்து
என்னோடொன்று சொல்லவே
என்னுளத் திருந்த பந்தம்
ஏதுமற்றுப் போனதே
வளமையுற்று இளமைபெற்று
வலிமிகுந்த தென்னவே
வந்ததே சுதந்திரத்தில்
வாஞ்சையென்ற ஞானமே.

அழகனந்த முருகன்வந்தென்
அருகிருந்த போதிலே
ஐம்புலன்க ளுக்கொடுங்கி
அஞ்சியஞ்சி அஞ்சினான்

## தமிழன் இதயம்

பழமையென் உடற்கண்வைத்த
பற்றுயாவும் அற்றதால்
பாரிலென்னை யாருங்கண்டு
பணியுமாறு செய்ததே.

அன்பனந்த முருகன்வந்
தழைத்திருத்தி என்னையே
அஞ்சல்அஞ்சல் அஞ்சலென்
றகங்குழைந்து சொன்னதால்
துன்பமிக்க அடிமைவாழ்வில்
தோய்ந்திருந்த என்மனம்
சோகம்விட்டு விடுதலைக்கு
மோகமுற்றி விட்டதே.

# முருகன்மேற் காதல்

முருகனென்ற பெயர் சொன்னால்—தோழீ!
உருகுதெந்தனுளம் என்னே!
பெருகி நீர்விழிகள் சோர—மனம்
பித்துக்கொள்ளுது உள்ளூர (முரு)

கந்தனென்று சொலும் முன்னே—என்
சிந்தை துள்ளுவது என்னே!
உந்தும் பேச்சுரைகள் உளறி—வாய்
ஊமை யாகுதுளம் குளிர (முரு)

வேலனென்ற பெயர் கேட்டு—ஏனோ
வேர்வை கொட்டுதுதன் பாட்டில்
காலனென்ற பயம் ஓடி—புது
களி சிறக்குதடி சேடி. (முரு)

குமரனென்ற ஒரு சத்தம்—கேட்டு
குளிர வந்ததடி சித்தம்
அமர வாழ்வுபெறல் ஆனேன்—இனி
அடிமை யார்க்குமில்லை நானே. (முரு)

குகனெனச் சொல்வதற் குள்ளே—நான்
அகம் மறந்தேன் அது கள்ளோ!
தகதகவென் றொரு காட்சி—உடனே
தன்னைமுன் வரல் ஆச்சு. (முரு)

## தமிழன் இதயம்

ஆடும் மயிலில் வரக்கண்டேன்—சொல்ல
அழகு அதைவிட ஒன்றுண்டோ
வீடு வாசல் பொருள் எல்லாம்—துச்சம்
விட்டு மறந்தனடி நல்லாள் (முரு)

பச்சைக் குழந்தையவன் மேலே—எந்தன்
பற்று மிகுந்த தெதனாலே ?
இச்சை யாரமிகத் தழுவி—நானும்
இணங்கி யிருந்தனின்பம் முழுகி (முரு)

கள்ளங் கபடமற்ற பாலன்—மேலே
காதல் கொண்ட என்னை ஞாலம்
எள்ளி ஏளனஞ் செய்தாலும்—நான்
எதற்கும் அஞ்சிலன் எக்காலும் (முரு)

முருகன் கந்தன் வடிவேலன்—ஞான
திருகுகன் குமரன் சீலன்
சிறு குழந்தை யானாலும்—அவனைத்
திருமணம் புரிவன் மேலும் (முரு)

வேறு பெயரைச் சொன்னாலும்—சற்றும்
விரும்ப மாட்டேனெந்த நாளும்
தூறு பேசுவதை விட்டு—எனக்குத்
துணை புரி முருகனைக் கட்ட (முரு)

# கடவுளை அறிந்தவர்கள்

## பல்லவி

அவரே கடவுளை அறிந்தவராவர்
அனைவரும் மதித்திடத் தகுந்தவராவர். (அவ)

## சரணம்

துன்பப்படுவோர் துயரம் சகியார்
துடிதுடித்தோடித் துணைசெயப் புகுவார்
இன்பம் தமக்கென எதையும் வேண்டார்
யாவரும் சுகப்படச் சேவைகள் பூண்டார். (அவ)

பசியால்வாடின எவரையும் பார்த்து
பட்டினி தமக்கெனப் பரிதபித்தார்த்து
விசையாய் முடிந்ததை விருப்புடன் கொடுப்பார்
வீண்உபசாரம் விளம்புதல் விடுப்பார். (அவ)

நோயால் வருந்திடும் யாரையும் கண்டு
நோன்பெனச் செய்வார் எல்லாத் தொண்டும்
தாயாம் எனவே தம்சுகம் எதையும்
தள்ளிவைத் தருகினில் தாமிருந் துதவும். (அவ)

# பெரியோர்

மடங்கிய பயிர்க ளெல்லாம்
மழைவர நிமிர்ந்து நீளும்
மருண்டிடும் குழந்தை பெற்ற
மாதினைக் கண்டு தேறும்
ஒடுங்கிய தேகம் தக்க
உணவினால் உறுதி கொள்ளும்
ஒளிந்திடும் நாகம் நல்ல
ஓசையால் வெளிவந் தாடும்
அடங்கிஇத் தேகந் தன்னில்
அவித்தையில் அழுந்தும் ஆன்மா
அன்பின்நல் உருவ மாய
அறிஞரைக் கண்ட போது
முடங்கிய மயக்கம் நீங்கி
முன்னைய உணர்ச்சி ஓங்க
மொய்ச்சுடர்க் கொழுந்து போல
முடுகிடும் மேமே லன்றோ.

அறுமறையும் பலகலையும் உலகுக் கீந்து
அறுசமயப் பலவழியை அடக்கி யாண்டு
உரிமையுடன் பிறநாட்டார் உவந்து போற்ற
ஊழிதொறும் புதிதாகும் உயர்வு தாங்கும்
பெருமைநமைப் பெற்றெடுத்த இந்த நாடு
பெற்றதென நாமடைந்த பெரிய பேறு
மருளகற்றி அருள்சுரக்கும் ஞானந் தோன்றி
மனத்துறவு பூண்டவர்கள் மகிமையேயாம்.

# இராமகிருஷ்ண தேவர்

முன்னையோர் நமது நாட்டின்
முனிவரர் தேடி வைத்த
முழுமுதல் ஞான மெல்லாம்
மூட நம்பிக்கை யென்றும்,
பொன்னையே தெய்வ மென்றும்,
போகமே வாழ்க்கை யென்றும்,
மனிதரைக் கொன்று வீழ்த்தும்
போரையே வீர மென்றும்
தன்னையே பெரிதா யெண்ணித்
தனக்குமேல் இருக்கும் வேறோர்
சக்தியின் நினைப்பே யின்றித்
தருக்கியே பிறப்பின் பாண்மைத்
தின்னுமோர் மயக்கம் நீங்கித்
தெளிந்திட எழுந்த ஞானத்
தீபமே ராம கிருஷ்ண
தேவனே போற்றி போற்றி.

மனிதரின் பாவம் போக்க
மகிழ்ச்சியோ டுயிரைத்தந்த
மாபெரும் த்யாக மூர்த்தி
ஏசுவின் அன்பாம் நெய்யை,
தனிவரும் துறவி யென்று
தரணியோர் யாரும் போற்றும்
சாந்தனும் புத்த தேவன்
தவமெனும் தட்டில் ஊற்றி,

## தமிழன் இதயம்

இனியொரு மனிதர்க் கில்லை
இத்தனைப் பொறுமை யென்னும்
எம்பிரான் மஹமத் நீட்டும்
சமரசக் கைகள் ஏந்த,
சினமெனும் அரக்கர் கூட்டம்
திரியென எரியும் ஞான
தீபமே ராமகிருஷ்ண
தேவனே போற்றி போற்றி.

பேயென்றும் மாயை யென்றும்
பெண்களை இகழ்ந்து பேசிப்
பெருந்துற வடைந்த பேரும்
பிழைபுரிந் தவரே யன்றோ!
தாயென்றும் துணைவி யென்றும்
தன்னுடை நோக்கம் காக்கும்
சகதர்ம சக்தி யென்றும்
சாரளா தேவி தன்னை
நீ யென்றும் மகிழ்ந்து கொண்ட
நிர்மல வாழ்க்கை தன்னை
நினைத்திடுந் தோறும் நெஞ்சம்
நெக்குநெக் குருகும் ஐயா
தீயென்னப் புலனைக் காய்ந்த
தீரனே ஞான வாழ்வின்
தீபமே ராம கிருஷ்ண
தேவனே போற்றி போற்றி.

'ஜாதியில் உயர்ந்தோம்' என்னும்
சனியனும் அகந்தை நீங்கத்
தாழ்ந்தவர் குடிசைதோறும்
தலையினால் பெருக்கிவாரும்

சேதியைத் தெரிந்து அன்னார்
திகைத்துனைத் தடுத்ததாலே
தெரியாமல் இரவிற் சென்று
தினந்தினம் அதையே செய்து
ஆதியின் அருளைத் தேடும்
அந்தணர்க் கரசே! ஐயா!
ஆணவம் அழிந்தா லன்றி
ஆண்டவன் அணுகான் என்றாய்
தீதுகள் உலகில் நீங்கித்
திக்கெலாம் ஒளிரும் ஞான
தீபமே ராம கிருஷ்ண
தேவனே போற்றி போற்றி.

'இரும்பினாற் சதையும் நல்ல
எஃகினால் நரம்பும் கொண்ட
இந்திய இளைஞர் தோன்றி
உழைத்திட வேண்டும்' என்று
விரும்பினேன் மதன ரூப
விவேக ஆனந்த ஞானி
வேடிக்கை யாக வந்து
'கடவுளைக் காட்டும்' என்ன,
அரும்பினாய் முறுவல் அங்கே
அதன் பொருள் அறிவார் யாரே!
அன்றேஉன் அடிமையாகி
அதுமுதல் உன்னை விட்டுத்
திரும்பிடான் விட்டில் போலத்
திளைத்தவன் விழுந்த ஞான
தீபமே ராம கிருஷ்ண
தேவனே போற்றி போற்றி.

## தமிழன் இதயம்

காவியை உடுத் திடாமல்
கமண்டலம் எடுத்தி டாமல்
காட்டிடை அலைந்தி டாமல்
கனலிடை நலிந்தி டாமல்
பூவுல கதனைச் சுத்தப்
பொய்யென்றும் புகன்றி டாமல்
புறத்தொரு மதத்தி னோரைப்
புண்படப் பேசி டாமல்
சேவைகள் செய்தாற் போதும்
தெய்வத்தைத் தெரிவோம் என்று
தெளிவுறக் காட்டினாய் உன்
தினசரி வாழ்க்கை தன்னால்
தீவினை இருட்டைப்போக்கிச்
செகமெலாம் விளங்கும் ஞான
தீபமே ராமகிருஷ்ண
தேவனே போற்றி போற்றி.

# சமரச சன்மார்க்கம்

எல்லா மதத்தினரும் கூடுவோமே
ஏகம் கடவுளென்று பாடுவோமே
நல்லார் உலகிலெங்கும் சொன்னது ஒன்றே
ராமகிருஷ்ணர்வாழ்க்கையினில் கண்டோம்இன்றே

இற்றைக்கு நூறாண்டு முன்னம் ஒருநாள்
இந்நாட்டின் தெய்வீகத் தன்மைகளெல்லாம்
புத்தம் புதுஉருவில் தேவையறிந்தே
போந்ததென ராமகிருஷ்ண தேவர் பிறந்தார்.

பள்ளிப் படிப்பெதுவும் இல்லாமலும்
பாடம் வேறொருவர் சொல்லாமலும்
வெள்ளம் பலநிறைந்த கடலே போல்
வெவ்வேறு மதங்களுக் கிடமானார்.

தானே நினைத்தறியும் படிப்பன்றோ
தன்னைத் தேற்றுவிக்க முடிப்பாரும்
ஊனோ டுயிர்கலந்த ஒழுக்கமன்றோ
உண்மை ராமகிருஷ்ணர் வழக்கமெல்லாம்.

ஏட்டுப் படிப்பை மட்டும் கற்றோமே
ஏழைக் கிரங்கு மன்பைப் பெற்றோமா ?
நாட்டில் நலிந்தவர்க்காய் அழுதுருகும்
ராமகிருஷ்ணர் தம்கருணை தொழுதிடுவோம்.

## தமிழன் இதயம்

சோறும் துணியும்மட்டும் தேடினோமே
துன்பம் குறைக்குமருள் கூடினோமா?
கூறும் ராமகிருஷ்ணர் கதை படிப்போம்
கூடும் கவலைகளின் முனை ஒடிப்போம்.

வீடும் மனையும்மட்டும் கட்டினோமே
விமலன் அருளைக்கொஞ்சம் கிட்டினோமா?
பாடும் ராமகிருஷ்ணர் சரித்திரத்தைப்
படித்து ஜெயித்திடுவோம் தரித்திரத்தை.

மக்கள் மனைவிபொருள் நல்லதேதான்
மற்றும் பெரியசுகம்இல்லையோ தான்?
மிக்கபெரிய இன்பம் கொண்டபெரியார்
மேலோர் ராமகிருஷ்ணர் கண்டு தெரிவோம்

உடலுக் கணிகள் பல பூண்டோமே
உயிருக் கழகுசெய்ய வேண்டாமோ?
கடனுக் கழுதுசெய்யும் பூசனையெல்லாம்
கட்டாது ராமகிருஷ்ணர் பேசினதுகேள்.

# உலகம் வாழ்க !

கவிபாடிப் பெருமை செய்யக் கம்ப னில்லை
கற்பனைக்கிங் கில்லையந்தக் காளி தாசன்
செவி நாடும் கீர்த்தனைக்கு த்யாக ரில்லை
தேசீய பா ரதியின் திறமும் இல்லை
புவிசூடும் அறிவினுக்கோர் புதுமை தந்து
புண்ணியமும் கண்ணியமும் புகழும் சேர்ந்த
உவமானம் வேறெவரும் உரைக்க வொண்ணு
உத்தமராம் காந்தியரை உவந்து பேச

சொல்லுவது எல்லார்க்கும் சுலப மாகும்
சொன்னபடி நடப்பவர்கள் மிகவும் சொற்பம்
எல்லையின்றி நீதிகளை எழுதுவார்கள்
எழுதியது பிறருக்கே தமக்கென் றெண்ணார்
தொல்லுலகில் நாமறிந்த தலைவர் தம்முள்
சொன்னதுபோல் செயல்முயன்றார் இவரைப் போல
இல்லையெனும் மோகனதாஸ் கரம்சந்த் காந்தி
இந்தியத்தாய் உலகினுக்கேஈந்த செல்வம்.

கொலைகளவு பொய்சூது வஞ்ச மாதி
கொடுமைகளே வித்தைகளாய் வளர்த்துக் கொண்டு
தலைசிறந்த பிறவியென்னும் மனித வர்க்கம்
சண்டையிட்டு மடிவதனைத் தடுக்கவேண்டி

## தமிழன் இதயம்

உலகிலுள்ள மனிதரெல்லாம் கலந்து வாழ
ஒருவராய்த் தவம்புரிய உவந்த காந்தி
விலை மதிக்க முடியாத செல்வ மன்றோ
வேறென்ன நாட்டிற்குப் பெருமை வேண்டும்.

புத்தர் பிரான் பெருந்துறவைப் படிக்கும் போதும்
போதிமர நிழல்ஞானம் நினைக்கும் போதும்
கர்த்தர்பிரான் ஏசுமுன்னாள் சிலுவை தன்னில்
களிப்போடு உயிர்கொடுத்த கதையைக் கேட்டும்
சத்துருவாய்க் கொல்லவந்தோர் தமையுங் காத்த
தயைமிகுந்த நபிகளின்பேர் சாற்றும் போதும்
உத்தமரைக் 'கண்டோமா' என்னும் ஏக்கம்
ஒவ்வொருநாள் நமக்கெல்லாம் உதிப்பதுண்டே.

'குத்தீட்டி ஒருபுறத்தில் குத்தவேண்டும்
கோடாரி ஒருபுறத்தைப் பிளக்கவேண்டும்
ரத்தம்வரத் தடியடியால் ரணமுண் டாக்கி
நாற்புறமும் பலர்உதைத்து நலியத் திட்ட
அத்தனையும் நான்பொறுத்து அஹிம்சை காத்து
அனைவரையும் அதைப்போல நடக்கச் சொல்லி
ஒத்துமுகம் மலர்ந்து உதட்டில் சிரிப்பி னோடும்
உயிர் துறந்தால் அதுவேஎன் உயர்ந்த ஆசை.

என்றுரைக்கும் காந்தியை நாம் எண்ணிப்பார்த்தால்
எலும்பெல்லாம் நெக்குநெக்காய் இளகு மன்றோ
நின்றுரைக்கும் சரித்திரங்கள் கதைகள் தம்மில்
நினைப்பதற்கும் இச்சொல்லை நிகர்வ துண்டோ

## தமிழன் இதயம்

கன்றினுக்குத் தாய்போல உயிர்கட்காகக்
கரைந்துருகும் காந்தியைநாம் நேரிற் கண்டோம்
இன்றுலகின் துயர்நீங்கச் சிறந்த மார்க்கம்
எடுத்துரைக்கக் கொடுத்து வைத்தோம் இருந்து
கேட்க.

கவிராஜர் கற்பனைக்கும் எட்டாத் தீரம்
கடலென்றுற் குறைவாகும் கருணை வெள்ளம்
புவிராஜர் தலைவணங்கும் புனித வாழ்க்கை
பொறுமையெனும் பெருமைக்குப் போற்றும் தெய்வம்
தவராஜ யோகியர்கள் தேடும் சாந்தி
தளர்வாகும் எழுபத்து ஏழாம் ஆண்டில்
யுவராஜ வாலிபர்க்கும் இல்லா ஊக்கம்
ஒப்பரிய காந்தியரால் உலகம் வாழ்க !

# சாந்தியே காந்தி

## பல்லவி

சாந்தியின் விரிவுரை காந்தியின் சரித்திரம்
தமிழா மறக்காதே.

## அனுபல்லவி

தேர்ந்தவர் ஞானமும் தெளிந்தவர் மோனமும்
செந்தமிழ் நூல்களெல்லாம் சந்ததம் கோருகின்ற (சாந்தி)

## சரணங்கள்

நாட்டைத் துறந்தவரும் வீட்டை மறந்தவரும்
நானுவிதம்பல தானம் புரிந்தவரும்
எட்டைத் தினம்புரட்டி எண்ணிப் படிப்பவரும்
எல்லாவிதத்திலும் நல்லோர் விழைந்திடும் (சாந்தி)

வேதங்கள் தேடுவதும் கீதங்கள் பாடுவதும்
வேள்வி முயன்றதுவும் கேள்வி பயின்றதுவும்
காதம் பல நடக்கும் காவடி யாத்திரையும்
கற்றவர் மற்றவரும் முற்றும் விரும்புகின்ற (சாந்தி)

முந்திநம் முன்னவர்கள் நொந்து தவம்புரிந்து
முற்றும் அறங்களினுல் பெற்ற பெரும்பயனும்
இந்திய நாட்டினுக்கே சொந்தப் பெருமையென்று
எங்கெந்த நாட்டவரும் வந்து பயிற்சிபெறும் (சாந்தி)

# காந்தியடிகளின் பெருமை

இந்திய நாடு சுதந்தர மெய்தநல்
தந்திரம் தந்தது யார் ?—சிறு
கந்தை ' பக்கி ' ரென்று தங்கொருவன் சொன்ன
காந்தி யென்னும் பெரியார்.

அஞ்சிக் கிடந்தநம் நெஞ்சந் துணிந்திட
ஆண்மை எழுப்பினதார் ?—ஒரு
வஞ்ச மில்லாதவர் வாய்மையின் தூய்மையின்
வாழ்க்கையர் காந்தியவர்.

ஆயுதம் இன்றியும் யாரும் வணங்கிடும்
அன்பைப் பெருக்கினதார் ?—சற்றும்
சாயுதல் செய்திடாச் சத்தியமூர்த்தி நம்
தவமுனி காந்தியவர்.

நாட்டினிக்காயுயிர் கேட்பினும் தந்திட
நானென்று முன்வருவோர்—பலர்
போட்டியிட்டே வர வீரம் புகுத்தினர்
புண்ணியர் காந்தியவர்.

அடிபட்டு மாளவும் சிறைபட்டு வாழவும்
அச்சமகற்றினதார் ?—உண்மை
குடிகொண்டு கோபத்தைக் குறைவற நீக்கிய
குணமுயர் காந்தியவர்.

# தமிழன் இதயம்

பேதையரென்று நாம் பேசிய பெண்களும்
வீதியில் நம்மிலுமே—இந்த
நீதியில்லா முறை அரசை எதிர்த்துடன்
நின்றிடக் காந்தி செய்தார்.

சின்னஞ்சிறிய குழந்தைகளும் இன்று
ஜயஜய வென்றுசொல்லி—எங்கும்
கல்நெஞ்சுருகிடத் தேசத்தினைத்தொழ
காந்திஜி செய்துவிட்டார்.

தீண்டப்படாதென்று மனிதரைச் சொல்வது
தீமையில் தீமையென்றே—அதைப்
பூண்டொடும் போக்கநாம் விரதம்புனைந்தது
புண்ணியர் காந்தியினால்.

தன்னை வதைப்பவர் தங்களுக்கும் அன்பைத்
தாங்குவதே தவமாம்—என்று
முன்னை இந்நாட்டினில் சொன்னவர் சொற்களை
முற்று வித்தார் காந்தி.

உடலினும் உயிரினும் உள்ளிருக்கும் ஒன்று
உயர்ந்தது காணும் என்றே—இந்தக்
கடலுலகத்தினில் கண்ணுக்கு முன்னாக
காட்டிவிட்டார் காந்தி.

காந்தியெனும்பெயர் சாந்தம் எனும் சொல்லின்
காட்சியின் சாட்சியென்றே—இனி
மாந்தர்கள் எங்குமே ஏந்தி அதன்வழி
மங்களம் எய்திடுவார்.

# உத்தமன் காந்தி

உள்ளம் உருகுது கள்ளம் கருகுது
உத்தமன் காந்தியை நினைத்து விட்டால்
வெள்ளம் பெருகிடக் கண்ணீர் வருகுது
வேர்க்குது இன்பம் சேர்க்குதடா........

சித்தம் குளிர்ந்துள பித்தம் தெளிந்திடும்
சீரியன் காந்தியின் பேர் சொன்னால்
புத்தம் புதியன முற்றும் இனியன
பொங்கிடும் உணர்ச்சிகள் எங்கிருந்தோ....

கிளர்ச்சிகொண் டான்மா பளிச்சென மின்னுது
கிழவன் காந்தியின் பழமை சொன்னால்
தளர்ச்சிகள் நீங்கிய வளர்ச்சியில் ஓங்கிய
தாட்டிகம் உடலில் கூட்டுதடா....

சோற்றையும் வெறுக்குது காற்றையும் மறக்குது
சுத்தனக் காந்தியின் சக்தி சொன்னால்
கூற்றையும் வெருட்டிடும் ஆற்றலைத் திரட்டிடக்
கூடுதடா மனம் தேடுதடா

தூக்கமும் கலைந்தது ஏக்கமும் குலைந்தது
துன்பக் கனவுகள் தொலைந்ததடா
வாழ்க்கையும் திருந்திட நோக்கமும் விரிந்தது
வள்ளலக் காந்தியின் நினைப்பாலே....

## தமிழன் இதயம்

வஞ்சனை நடுங்கிடும் வெஞ்சினம் அடங்கிடும்
வாய்மையன் காந்தியின் தூய்மை சொன்னால்
அஞ்சின மனிதரும் கெஞ்சுதல் இனியில்லை
ஆண்மையும் அன்பும் அருளுமடா....

ஜீவர்கள் உலகுள யாவரும் சமமென
செய்கையில் காட்டிய காந்தியடா
பாவமும் பழிகளும் தீவினை வழிகளும்
பதுங்குமடா கண்டு ஒதுங்குமடா....

எழுபதும் ஐந்தும் குழகுழ வயசினில்
என்னே! காந்தியின் இளமையடா!
முழுவதும் அதிசயப் பழுதறு வாழ்க்கையின்
முத்தனடா பெரும் சித்தனடா....

காந்தியின் தவக்கனல் சூழ்ந்தது உலகினைக்
காம தகனமென எரிக்குதுபார்
தீய்ந்தன சூதுகள் ஓய்ந்தன வாதுகள்
திக்குத் திசையெல்லாம் திகைத்திடவே....

ஏழைகள் எளியரின் தோழன்அக் காந்தியை
எப்படிப் புகழினும் போதாதே
வாழிய அவன்பெயர் ஊழியின் காலமும்
வையகம் முழுவதும் வாழ்ந்திடவே.

# காந்தி வழி பழசா?

சாந்தவழி சத்தியத்தில் சலித்தாய் நெஞ்சே !
சன்மார்க்கப் பழக்கமில்லாச் சகவா சத்தால்
காந்திவழி பழசாகப் போன தென்று
கதிமாற மதிமாறிக் கருதுகின்றாய் ;
மாந்தருக்குள் காந்தியைப்போல் புதுமை வாழ்க்கை
மற்றொருவர் நடத்தினதார் ? மனமே சொல்வாய்
ஆய்ந்தறிந்த அவன் தொடர்பை இகழ்வாயானால்
யாரும்இனி மீட்கவொண்ணா அடிமையேநீ.

'பெற்றெடுத்த தாய்மிகவும் பழசாய்ப் போனாள்
பிறிதொருதாய்வேண்டு'மென்று பேசுவார்போல்
நற்றவத்தால் நமக்கடுத்த தலைவன் காந்தி
நானிலத்தின் உயிர்கட்கெல்லாம் தாயாம் நண்பன்
கற்றகதை சரித்திரங்கள் காணாச் சுத்தன்
கருணையென்ப தின்னதெனக் காட்டும் தீரன்
உற்றதுணை காந்திவழி பழசாமென்றால்
உய்வதற்கு வேறுகதி உண்டோ நெஞ்சே !

'சந்திரனும் சூரியனும் பழசாய்ப் போனார்
சலித்துவிட்டோம் தினந்தினமும் அதையேபார்த்து
விந்தையுள்ள வேறிருவர் வேண்டுமென்று
விரும்புவதை ஒக்குமன்றோ விளம்பாய் நெஞ்சே

## தமிழன் இதயம்

இந்தநிலம் இதுவரையில் அறிந்த உண்மை
இதைவிடமேல் இல்லையென நடந்துகாட்டிச்
சந்ததமும் மாறாத அறத்தைக் காக்கும்
சாந்தனந்தக் காந்திலையநீ சலித்ததன்மை!

'நித்தம்ஒரு காற்றினையே மூச்சு வாங்கி
நீர்நெருப்பு நிலம்வானில் புதிசுமின்றி
மெத்தவும்நாம் சலித்துவிட்டோம்' என்பா யானால்
மேதினியில் வேறுவழி உண்டோ நெஞ்சே!
சத்தியஞ்சேர் சாந்தவழி அதையே நித்தம்
சாதிப்பான் காந்தியென்று சலிப்பாயானால்
பத்தியத்தைப் பாதியிலே முறித்தாற்போலப்
பாடுபட்டும் பயனடையாப் பதரே ஆவாய்.

மாறுகின்ற சிறுபொருள்கள் மயக்கத்தாலே
மாறாத உண்மைகளை மறந்தாய்நெஞ்சே
கூறுபல மாச்சரியம் குறையநம்முன்
குற்றமற்ற சாந்தவழி வேண்டும் என்றே
வேறுபல துன்பவழி எல்லாம் விட்டு
வெகுபுதிய காந்திவழி விரும்பிக் கொண்டாய்
சேறுபட்ட உலகநடை மீட்டும் சேர்ந்து
செய்தஅருந் தவப்பயனைச் சிதறுகின்றாய்.

கலகமெல்லாம் கைகோத்துக் களிகூத்தாடக்
கரடிபுலி சிங்கமென மனிதர்சீற
அலகைபற்றி ஆட்டுதல்போல் அகிலம் அஞ்ச
அடிதடியும் கொலைகளவும் அறம்போல் ஓங்க

## தமிழன் இதயம்

உலகமெல்லாம் காந்தியையே உற்றுப் பார்த்து
உய்வதற்கோர் புதியவழி உரைத்தானென்று
பலகலையின் அறிஞரெல்லாம் புகழப் பார்த்தும்
பரிகசித்தாய் நீ அவனைப் பாவி நெஞ்சே!

அச்சமிக்க இருட்டறையில் அடைபட் டங்கே
அழுவதற்கும் ஜீவனற்றுக் கிடந்த உன்னை
மிச்சமுள்ள மூச்சுமற்றுப் போகு முன்னால்
மீட்டணைத்து மேனிசெய்து விட்டான் காந்தி!
இச்சகத்தில் அறிவறிந்தோர் என்றும் வாழ்த்தும்
இன்பமிகும் காந்திவழி பழசா மென்றால்
பச்சையிளங் காய்புதிய தென்றுகொண்டு
பழுத்தபழம் பழசென்னும் பான்மையாகும்.

# தருணம் இதுவே

பல்லவி

தருணம் இதுவே. தருமம் இதுவே
தமிழா ! எழுந்திரடா.

அனுபல்லவி

கருணையின் வடிவாம் கலைகளின் முடிவாம்
காந்தி யென்றொருமுனி 'சாந்தி' யென்றழைக்கிறார். (தரு)

சரணம்

வள்ளுவர் வாழ்க்கையும் திருக்குறள் வகுத்ததும்
தள்ளரும் தாயுமா னவருடல் தகித்ததும்
வள்ளலி ராமலிங்க சுவாமிகள் வடித்ததும்
கள்ளமில் பட்டினத்தார் கவலையும் இதற்கே. (தரு)

சைவர்கள் பூண்டதும் சமணர்கள் மாண்டதும்
வைணவர் வருத்தமும் புத்தர்கள் வாட்டமும்
மையற ஏசுநாதன் சிலுவையில் மரித்ததும்
மஹம்மது நபியவர் மகிழ்ந்ததும் இதற்கே. (தரு)

கம்பன் கவித்திறமும் வில்லியின் சந்தமும்
செம்பொருள் சேக்கிழார் தேடித் திரிந்ததுவும்
பைம்பரஞ் சோதியார் பாடிப் பகர்ந்ததுவும்
நம்பின யாவரும் நவின்றதும் இதுவே. (தரு)

## தமிழன் இதயம்

நால்வர் தேவாரமும் ஔவை நன் மொழிகளும்
ஆழ்வா ராதியர் அனுபவ உரைகளும்
பால்வரும் திருப்புகழ் ஆதிய பனுவலும்
மேல்வரும் கதிக்கென விளம்பிய திதுவே. (தரு)

யாகங்கள் முயன்றதும் யோகங்கள் பயின்றதும்
மோகங்களைவிடுத்த முனிவரர் பற்பலர்
சாகங்களைப் புசித்துத் தவங்கிடந் துழன்றதும்
ஆகமம் பற்பலவும் அலைந்ததும் இதற்கே. (தரு)

# காந்தீய சேவை

சாந்தி சாந்தி சாந்தியென்று
சங்கு கொண்டு ஊதுவோம்
சோர்ந்திருக்கும் உலகினுக்குச்
சுகமெடுத்து ஓதுவோம்
மாந்தருக்குள் கோபதாப
வாது சூது மாறவே
காந்தி சொன்ன— மார்க்கமின்றிக்
கதி நமக்கு வேறிலை.

மனித வாழ்வை மிருகமாக்கும்
மமதையாவும் மாற்றுவோம்
புனித மிக்கப் புதியவாழ்வு
புவியில் மீளப் போற்றுவோம்
இனிய ஞான சரிதமிக்க
இந்தியாவின் மக்கள் நாம்
கனதையிந்தச் சேவை செய்யத்
தகுதியாவும் மிக்குளோம்.

வேக மான எந்திரங்கள்
வேண வேண செய்யினும்
போகவாழ்வு கோருகின்ற
புதுமை யாவும் எய்தினும்

## தமிழன் இதயம்

ஆகும் மற்ற வித்தைகற்று
உலகை வென்று ஆட்டினும்
நாக ரீகம் அல்லவென்று
நாம் நடந்து காட்டுவோம்.

கொன்று வீழ்த்தல் வீரமென்னும்
கொச்சை யான கொள்கையை
இன்று தொட்டு மாற்றிவிட்டு
உண்மை வீரம் கொள்ளுவோம்
தொன்று தொட்டுக் கருணை கற்ற
பரத நாட்டில் தோன்றினோம்
நன்று இந்தச் சேவைக்கேது
வேறு நம்மைப் போன்றவர்.

தமிழ ருக்குக் கருணை எண்ணம்
தாயின் பாலில் தந்தது
குமிழை யொத்த உயிரைநல்ல
கொள்கைக் கீய முந்திடும்
அமுத மொத்த காந்திமார்க்கம்
தமிழ கத்தின் செல்வமாம்
நமது சேவை அதனை ஏந்தி
நாட்டி லெங்கும் சொல்வதாம்.

# ஜவஹர்லால் நேரு

மன்னுயிரைப் போர்க்களத்தில் கொன்று வீழ்த்தி
மலைமலையாய்ப் பிணக்குவியல் குவித்ததாலே
மன்னரெனப் பலர்வணங்கத் தருக்கி வாழ்ந்தோர்
மாநிலத்தில் எத்தனையோ பேரைக் கண்டோம்
தன்னுயிரை மன்னுயிர்க்கே தத்தம் செய்து
தருமநெறி தவறாத தன்மைக் காக
இன்னுயிர்கள் மனங்குளிர்ந்து இளங்கோ என்று
எதிர்கொள்ளும் மன்னனெங்கள் ஜவஹர் லாலே.

பணம்படைத்த சிலபேர்கள் தனியே கூடிப்
பட்டாளம் சுற்றி நின்று பாரா செய்ய
மணம்படைத்தாம் வரவளிக்க மகிழ்ந்து போகும்
மன்னரென்பார் எத்தனையோ பேர்கள் உண்டு
குணம்படைத்துக் கருணை மிகும் கொள்கைக் காகக்
கோடானு கோடிமக்கள் எங்கும் கூடி
'கணம்பொழுதுங்கள் கண்டாலும் போதும்' என்று
களிசிறக்கும் மன்னனெங்கள் ஜவஹர் லாலே.

எச்சிலுண்ணும் சிறுமனத்தார் பலபேர் கூடி
இல்லாத பெருமைகளை இசைத்துக் கூறும்
இச்சகத்தால் மதிமயங்கி இறுமாப் புற்ற
இருள்மனத்தார் எத்தனையோ அரசர் கண்டோம்

## தமிழன் இதயம்

மெச்சுகின்ற பிறர்மொழியை மிகைசெய் யாமல்
மெய்யறிவும் பொய்வெறுப்பும் துணையாய் மேவ
அச்சமற்ற நல்லொழுக்கம் அதற்கே மக்கள்
ஆசைசெய்யும் அரசெனங்கள் ஜவஹர் லாலே.

சேனைகளை முன்செலுத்திப் பின்னால் நின்று
ஜெயித்துவிட்டேன் என்றுசொல்லிச் செருக்கிலாழும்
ஊனமுள்ள பெருமையினால் அரச ரென்போர்
உலகத்தில் எத்தனையோ பேரைக் கண்டோம்
தீனர்களின் துயர்துடைக்க முன்னால் நின்று
தீரமுடன் பிறர்க்குழைக்கும் சிறப்புக் காக
மானமிகும் வீரனென எவரும் வாழ்த்த
மன்னனென விளங்கிடுவான் ஜவஹர் லாலே.

கஞ்சியின்றி உயிர்தளர்ந்த ஏழை மக்கள்
காலில்வந்து விழுவதையே களிப்பாய் எண்ணி
பஞ்சணையில் படுத்திருந்தபடியே இந்தப்
பாரளிக்கும் மன்னவர்கள் பலரைப் பார்த்தோம்
தஞ்சமின்றித் தரித்திரத்தின் கொடுமை வாட்டத்
தவித்துழலும் பலகோடி மக்கட் கெல்லாம்
அஞ்சலென்ற மொழிகொணர்ந்து ஆண்மை யூட்டும்
அன்புருவாம் மன்னனெங்கள் ஜவஹர் லாலே.

ஆயுதத்தின் அதிகாரம் அதற்கே அஞ்சி
அடிபரவும் பலபேர்கள் அருகே சூழப்
பேயுதித்துக் கொலுவிருக்கும் பெற்றியே போல்
பிறர்நடுங்க அரசாண்டார் பலபேர் உண்டு
போயுதித்த இடங்களெல்லாம் புதுமை பூட்டிப்
புதையல்வந்து கிடைத்ததுபோல் பூரிப் பெய்தித்
தாயெதிர்ந்த குழந்தைகள்போல் ஜனங்கள் பார்க்கத்
தாவிவரும் மன்னனெங்கள் ஜவஹர் லாலே.

## தமிழன் இதயம்

ஏழைகளின் குடி-முழுக வரிகள் வாங்கி
இந்திரியச் சொந்தசுகங் களுக்கே வீசிக்
கோழையராய்ப் பிறர்உழைப்பில் கோலங் கொள்ளும்
கோமான்கள் குவலயத்தில் பலபேர் உண்டு
வாழையைப்போல் பிறர்க்குதவி வருத்தம் தாங்கி
வறியவர்க்கே கனிந்துருகும் வரிசைக்காக
வாழிஜவார் வாழிஜவார் வாழி யென்று
வாழ்த்திசைக்கும் மன்னனெங்கள் ஜவஹர் லாலாம்.

# திலகர்

[திலகர் இறந்த சேதியைக் கேட்டதினம் பாடியவை]

இடியது விழுந்ததோதான் இரும்பினைப்பழுக்கக்காய்ச்சி
இரு செவி நுழைத்ததோ தான்,
தடியது கொண்டே எங்கள் தலையினில் அடித்ததோதான்
தைரியம் பறந்ததோதான்
கொடியது சாய்ந்ததோதான் கொடுவிஷம் உச்சிக்கேறிக்
குறைந்திடுங் கொள்கைதானோ,
திடமுளதீரவீரன் திலகனார் மாண்டாரென்ற
தீயசொற் கேட்டபோது !

'என்னுடைய பிறப்புரிமை சுயராஜ்யம்' என்னுமொரு
மந்திரத்தை எங்கட்கீந்த
மன்னவனே திலகமுனி மஹாராஜாஎம்முடைய
மராட்டியர் தம் மடங்கலேறே ! .X.
உன்னுடைய பெருஞ்சேனை யுத்தத்திலணிவகுத்து
உத்தரவை எதிர்பார்த்து
இன்னவழி போவதெனத் தெரியாமல் திகைக்கின்ற
இச்சமயம் இறக்கலாமோ !

அன்னியர்கள் தொட்டிழுக்க அவமானம்நேர்ந்ததென
அழுது நின்றாள்
அன்னையுந்தன் பாரதத்தாய் அவள்மானம் காப்பதற்கே
அவதரித்தாய் ;

சின்னஉந்தன் வயதுமுதல் இதுகாறும் அப்பிடியைத்
தளர்த்துவிட்டாய்
இன்னுமவள் சிறைநீங்கி வருவதற்குள் எம்மைவிட்டு
ஏகினையே !

பகையென நினைத்த பேரும்
பக்தியோ டஞ்சி நிற்பார்,
மிகையெனச் சொல்லு வோரும்
மெய்சிலிர்த் திருவர் கண்டால்
நகைமுகங் கண்ட போதும்
நடுங்குவார் வெள்ளைக் காரர்,
தகையிவன் பிரிந்து போகத்
தரிக்குமோ இந்த நாடு ?

வசைகூறி உனையிகழ்ந்த வாலண்டைன்
சிர்ரலெனும் வகையிலோனை
வழிகூற அவன்மேலே நீதொடுத்த வழக்கிற்பல
வஞ்சமாற்றி,
அசைகூறி ஆங்கிலர்கள் அவன்பக்கம் தீர்ப்புச் சொன்ன
அவதிநோக்கி,
அங்கவர்கள் நீதிதனில் வைத்திருந்த நம்பிக்கை
அறவேநீங்கி
இசைகூற உலகமெலாம் இருந்தாளும் பெருங்கடவுள்
இருமன்றத்தில்
எடுத்துரைப்போம் இக்குறையும் இந்தியர்கள்
பலகுறையும் என்று சொல்லி,
பசைகூறித் தேவரிடம் பண்ணினையோ விண்ணப்பம்
பரிவுகூறி
பாங்குடனே அவர்விடுத்த ஓலைக்குப் பதிலுரைக்கப்
போயினையோ !

நிலை யிழந்து பரிதவிக்கும் நீபிறந்த இந்நாட்டின்
நிலைமை நோக்கி,
நீபட்ட கொடுந்துயரம் இன்னொருவர்படுவரென
நினைக்கப்போமோ,
கலையிழந்த மதியானோம், கண்ணிழந்தமுகமெனவே
கலங்கிநின்றோம்,
காரிழந்த பயிரெனவே சோறிழந்த வயிறெனவே
சோர்ந்துவிட்டோம்,
தலையிழந்த உடலமெனத் தவிக்கின்றோம் இது உனக்குத்
தருமந் தானோ,
தஞ்சமென முன்னின்று தைரியத்தோடுழைக்கு முந்
சப்தமோய [தன்
அலையிழந்த கடலேபோல் ஆட்டிழந்த பம்பரம்போல்
அடங்கி வீழ்ந்தோம்,
ஆரினிமேல் எங்களுக்கு அன்னையென முகந்
அறிவு சொல்வார்! [துடைத்து

இருப்பாய்நீ சிறைவாசம் இருமூன்று வருஷமென
இசைந்து கூறி
இதுபோதா துந்தனுக்கு மிகக்குறைத்தே
னென்ற, உந்தன்
சிறப்பறியப் போதாத தேவாரென் றொருஜட்ஜு
செப்புங் காலை,
சிரித்தமுகம் கோணமல் சினத்தஅகம்
காட்டாளுகி
"மறுப்பதுண்டு, குற்றமில்லேன், மகிதலத்தை ஆளு
சக்திவேறே [கின்ற
மறைந்திருந்து நானடையும் கஷ்டத்தின்
மர்மமாக

சிறப்புடைந்தன் தேசமென்று தெய்வத்தின் திருவுள்ளத்
தீர்ப்போ”, என்று
செப்பினது அழியாமல் எம்மனதில்
திகழுமென்றும்.

அஞ்சாத நெஞ்சம் வேண்டின்
அசையாத ஞானம் வேண்டின்
ஆடாத கொள்கை வேண்டின்
ஓடாத உறுதி வேண்டின்
கெஞ்சாத வாழ்க்கை வேண்டின்
கேடிலா எண்ணம் வேண்டின்
கேளாத கலைகள் வேண்டின்
மாளாத உழைப்பு வேண்டின்
நஞ்சான பேர்கள் யாரும்
நடுங்குமோர் நடத்தை வேண்டின்
நாணுத செயல்கள் வேண்டின்
கோணுத குணங்கள் வேண்டின்
செஞ்சாறுவார்த்தை வேண்டின்
திலகனுர் சரிதை தன்னில்
தெரியாத நீதி யெல்லாம்
தெரியலாம் தெளிவா யங்கே.

கருத்ததெல்லாம் நீராமோ வெளுத்ததெல்லாம் பாலா
கண்ணிற் கண்ட [மோ,
கல்லெல்லா மாணிக்கக் கல்லே யாமோ
பருத்ததெல்லாம் கரியாமோ பாய்ந்ததெல்லாம் சிங்க
பளபளப்பாய்ப் [மாமோ
பளுவிருந்தால் தங்கமெனப் பகர லாமோ,

விரித்தநிலாக் கதிர்பரப்பி வெள்ளியோடு பலமீன்கள்
விளங்கி னாலும்
வெங்கதிரோன் வந்ததென விளம்ப லாமோ,
தெருத்தெருவாய் மேடையிட்டுத் திசைமுழங்கப் பல
திரிந்திட்டாலும் [பேசித்
திலகர்பிரா னவரெனச் செப்ப லாமோ !

கருமமது செய்தல் வேண்டும்
கலங்காது உழைத்தல் வேண்டும்
கண்ணபிரான் கீதையிலே
சொன்னமொழி கடைப்பிடித்த
பெருமை யுள்ள திலகரை நீ
பிரித்தாயே யெம்மை விட்டு
பெம்மானே ஒருவரம் நீ
பிழையாது தருதல் வேண்டும் ;
தருமமது குறையும் போதும்
தப்பிதங்கள் நிறையும் போதும்
தப்பாம லவதரிப்பேன்
தரணியில் நா னென்றபடி
அருமறைகள் அறிய மாட்டா
அரும்பொருளே வருதல் வேண்டும்,
அன்புடன் நீ அப்போதும்
திலகருரு அடைதல் வேண்டும்,

# தாதாபாய் நவரோஜி

நேற்றுதித்த தேசமெல்லாம் நினைத்தபடி பலபேசி
நிந்தைகூறி
நின்றிடவே குன்றிடநாம் நெஞ்சுருகிப் பஞ்சையராய்
நித்தமேங்க
வேற்றரசர் நேசரெல்லாம் வேடிக்கை பார்த்தவராய்
விந்தைபேச
வெட்கமதால் தலைகுனிந்து வெருண்டுமன மருண்டஎமை
வெருளேலென்றும

ஆற்றலுள்ள முன்னோர்கள் அவர்வழியில் பிறந்தநமக்
கவதியுண்டோ
அடைந்திடுவோம் சுயராஜ்யம் அஞ்சாதீர் எனமொழிந்து
அன்பினாலே
தேற்றிடவே முன்னின்றாய் தெளிவுடையாய் தாதாபாய்
நவரோஜியே
தேவருடன் கலந்தனையோ எங்குறையை அங்கவர்க்குச்
செப்பவேண்டி ?

இருக்கிழவி பெருந்தேவி இந்தியநாடெம்மையெல்லாம்
ஈன்றதாயின்
உறுங்கிழமை சுதந்தரங்கள் ஒன்றேனும் குறையாமல்
வந்தாலன்றி

நெருங்கியநோய் பஞ்சங்கள் ஒருபோதும் நீங்காதென்
றுறுதிசொன்ன
பெருங்கிழவா தாதாபாய் நவரோஜீ உன்பெருமை
பெரிதேயாகும்.

பேசுவதால் பெறுவதில்லை பிதற்றுவதால் பெருமையில்லை
பிறரைநோந்து
ஏசுவதால் நேசமில்லை இழித்ததனால் களித்ததில்லை
என்று சொல்லி
தாசனென உழைத்திடவே வேண்டுமென்று தளராமல்
உழைத்துக்காட்டி
ஆசையுடன் நீயுரைத்த அம்மொழியை எக்காலும்
மறவோம் ஐயா.
உடலமது தளர்ந்தாலும் உன்னுறுதி தளராமல்
உழைத்து நின்றாய்
சடலமது மானிடராய்ப் பிறந்தவர்கள் இதைவிடவும்
சாதித்தாரோ
கடலுலகில் பிறந்தவர்கள் கணக்கற்றா ரென்றாலும்
கருதில் நீயே
அடைவரிய ஜென்மத்தின் அரும்பயனை அறிந்தவரை
அடைந்தாய் ஐயா.

பணமிருந்தும் பெருமையில்லை பந்துஜனமித்திரர்கள்
பரந்து சூழும்
கணமிருந்தும் கண்டதில்லை காடிருந்தும் வீடிருந்தும்
களைதயுண்டோ
குணமிருந்து பொறுமையுடன் குறையிருந்தார்
குறித்துவாடும் [ஏழைகளைக்
மனமிருந்தார் அடைந்திடுமோர் மாட்சிமைக்கு நீயு
சாட்சியானாய். [மொரு

# கோபால கிருஷ்ண கோகலே

படிப்பெனும் கடலை நீந்திப்
பணமெனும் ஆசை போக்கிக்
கடிப்புடன் மமதை யென்னும்
களையிலா தொழுகி நின்று
துடிப்புடன் இந்து தேசத்
தொண்டனும் தலைமை பூண்டு
கொடிப்படை யில்லா தாண்டான்
கோகலே என்னும் வேந்தன்.

ஜாதிமத பேதமெல்லாம் கடந்து நின்றான்
தனிப்பெரிய குலத்துதித்த தகைமை யுள்ளோன்
மேதினியில் உடன் பிறந்த உயிர்க ளெல்லாம்
மெலிவின்றிப் பசிநீங்கிக் களிப்ப தொன்றே
ஊதியமாம் எனக்கருதி உழைப்ப தற்கே
உடலோடு பொருளாவி உதவி நின்றான்
கோதிலான் கோபால கிருஷ்ண னெங்கள்
கோகலே யவன்பெருமை கூறப் போமோ"

தன்சுகமாம் தன்னாட்டார் சுகமே யென்றும்
தன்னறிவாம் தன்னாட்டார் அறிவே யென்றும்
தன்பெருமை தன்னாட்டார் பெருமை யென்றும்
தன்சிறுமை தன்னாட்டார் சிறுமை யென்றும்

## தமிழன் இதயம்

மன்பெரிய சபைதனிலும் மறவா ஞகி
 மலைபோல நிலையாகப் பாடு பட்டான்
என்சொலுவோம் கோகலே பெருமை தன்னை
 இறந்தாலும் இறவாதான் இவனே யாவான்.

தருமமும் கருமமெல்லாம் தனித்தனி மறந்து மிக்க
 தரித்திரம் பிணிகளெல்லாம் தங்கியே இங்கு நிற்கப்
பெருநிலக் கிழவியிந்த பேதையாம் இந்து தேசம்
 பலபல துன்பமுற்றுப் பஞ்சையாய் வாடிநிற்க
வெறுமனே யிருந்துநாங்கள் வீணரா யலைந்து கெட்டோம்
 வேண்டிடும் தேசபக்தி விமலனர் எமக்குத் தந்து
பெருமனே கோகலேநீ பின்னையும் பிறந்து வந்து
 பெற்றதாய் இந்துமாதின் பிணியெலாம் அறுத்து
 [வைப்பாய்.

# வ. வே. சு. ஐயர்

தமிழ்மொழியின் பெருமைதன்னை உலகறிய எடுத்தறைந்த
தனிப்பறையின் பேரோசை தணிந்ததேயோ!
தமியுரைத்த கவியரசன் சுவைவிளக்கக் கம்பனுக்காய்த்
தூதுவந்த பாதமவை துவண்டவேயோ!
அமிழ்ந்துறங்கும் தமிழர்களை அடிமைஇருள் அகன்றதென
அழைத்தெழுப்பும் கோழிகுரல் அடைத்ததேயோ!
குமிழ்நுரையின் மலையருவிச் சுழல்விழுந்து குருகுலத்துச்
சுப்ரமண்ய ஐயருடல் மறைந்த கொள்கை.

சுழிந்தோடி மடுக்கள்மிகும் உலகநடைச்
சுழல்கள் பல நீந்தி ஏறி
வழிந்தோடும் மலையருவிச் சுழல்விழுந்து
கரையேற மாட்டாய் ஏனோ!
கொழுந்தோடிப் படர்கலையின் குளிர்ஞானக்
குன்றே! ஓர் குன்றினின்றும்
ஒழிந்தோடி மறைந்தனையே! உடன்போந்த
சிறுவர்களின் உணர்ச்சி ஓட

தேனூட்டும் தென்மொழியும் தெருளூட்டும்
வடமொழியும் தெளியத் தேர்ந்து
மேனாட்டுப் பலமொழியும் மிகக்கூட்டிக்
கடைந்தெழுத்த அறிவை யெல்லாம்

## தமிழன் இதயம்

தாய்நாட்டின் விடுதலைக்கே தனிநாட்டித்
தவம்புரிந்த தகைமையாளா !
வானாட்டிற்சிறந்ததென்பாய் தமிழ்நாட்டை
விட்டு நீபோய் வாழ்வ தெங்கே ?

ஐயரெனில் அந்தணராய் அனைத்துயிர்க்கும்
செந்தண்மை அருள்வோர் என்று
செய்யதிரு வள்ளுவனார் செய்தமொழித்
திருக்குறளின் சீலனாகி
மெய்யறிவைப் பெறநாடி மெய்வருத்திப்
பொய் வெறுத்த மேன்மை யாலோ !
'ஐயர்' என்று தனியுரைத்தால் உன்னையன்றித்
தமிழுலகம் அறியா தையா.

முழுமதி மயிர்த்தா லன்ன முகந்திகழ் கருணை நோக்கும்
மூர்க்கரும் நேரிற்கண்டால் முகந்திடும் சாந்த வீச்சும்
குழலினும் இனியதான குழந்தையின் மழலைப் பேச்சும்
குவிந்திடும்உதட்டிற் கூடக் கூத்திடும்சிரிப்பின் கூட்டும்
தழலினும் தூய வாழ்வும் தாயினும் பெரிய அன்பும்
சத்திய நிலையும் முன்னாள் தவமுனி இவனே என்னப்
பழகிய பேயும் போற்றும் படித்தொரு வடிவம் தன்னை
பாரிடைஇனிமேல் வேறுயாரிடைப் பார்ப்போம் ஐயா!

# கவி தாகூர்

கலைமகள் கண்ணீர் சோரக்
கவிமகள் கலங்கி வீழத்
தலைமகன் இறந்தா னென்று
இந்தியத் தாய்த விக்க
அலைகடற் கப்பா லுள்ள
அறிஞர்கள் யாரும் ஏங்க
மலைவிளக் கவிந்த தென்ன
மறைந்தனன் கவிதா கூரே.

சந்திரன் கிரணத் தோடு
சூரியன் ஒளிசேர்ந் தென்ன
செந்தணல் நெருப்பில் நல்ல
சிலுசிலுப் பிணைந்த தென்ன
அந்தணர் அமைதி யோடே
அரசரின் ஆண்மை கூட்டும்
சுந்தரக் கவிகள் பாடும் சொல்வள
முடையோன் தாகூர்.

கருணையின் உருவு காட்டும்
கவிரவீந் திரநாத் தாகூர்
அருணனாய் உலகுக் கெல்லாம்
அறிவொளி பரப்பி வாழ்ந்தான்

## தமிழன் இதயம்

மருணெறி மாற்ற இந்த
மாநில மக்கட் கெல்லாம்
பொருணெறி சாந்தி சொல்லும்
புத்தக மாக நிற்பான்.

அரசியல் போராட்டத்தில்
ஆழ்ந்திலன் என்றிட்டாலும்
புரைசெயும் அடிமை வாழ்வின்
புண்ணையே எண்ணி எண்ணி
கரைசெய முடிந்திடாத
கவலையால் கண்ணீர் பொங்க
உரைசொலி அடிமைக் கட்டை
உடைத்திட துடித்தோன் தாகூர்.

'ஒத்துழை யாமை' என்று
காந்தியார் உரைக்கும் முன்னல்
இத்துரைத் தனத்தா ரோடு
இணங்கிடப் பிணங்கி விட்டோன்
பற்றுகள் அவர்முன் தந்த
பட்டமும் பரிசும் வீசிச்
சுத்தியை முதலிற் செய்த
சுதந்தர தீரன் தாகூர்.

காந்தியும் 'குருதேவ்' என்று
கைகுவித் திறைஞ்சும் தாகூர்
மாந்தருள் பலநாட் டாரும்
மதங்களும் மருவி வாழ்ந்து

## தமிழன் இதயம்

தேர்ந்தநல் லறிவை அன்பை
செகமெலாம் பரப்ப வென்றே
'சாந்திநி கேதன்' என்ற
சமரசச் சங்கம் தந்தோன்.

கலைகளின் வழியே தெய்வக்
கருணையைக் காண்ப தென்னும்
நிலையினைப் படிக்க வென்றும்
நிருவிய நிலயம் ஈதாம்
சிலைதரல் ஆடல் பாடல்
சித்திரம் நடிப்ப ரங்கம்
பலவித வித்தை எல்லாம்
பயிலுதற் கிடமாய் நிற்கும்.

தாய்மொழிப் பற்றும் தங்கள்
கலைகளைத் தாங்கி நிற்கும்
ஆய்மையும் வங்காளிக்கு
அதிகமாம் அதனால் எல்லாச்
சீமையும் தாகூர் பாட்டைச்
சிறப்புறப் பரப்பினார்கள்
வாய்மையைத் தமிழர் போற்றி
வளர்ப்பரோ தமிழன் மாண்பை.

# கவி தேசிக விநாயகம் பிள்ளை

தேசிக விநாயகத்தின் கவிப்பெருமை
　　தினமும் கேட்பதுஎன் செவிப்பெருமை
ஆசிய ஜோதியெனும் புத்தர்போதம்
　　அழகு தமிழில் சொன்னான் அதுபோதும்.

கோழி குலவிவரும் கிளிகொஞ்சும்
　　குழந்தை எழுந்துதுள்ளிக் களிமிஞ்சும்
ஏழை எளியவர்கள் யாவருக்கும்
　　இன்பம் கொடுக்க அவன் பாவிருக்கும்.

உழுது தொழில் புரியும் பாட்டாளி
　　உழைப்பில் ஓய்வுதரும் பாட்டாகும்
தொழுது அடிமைபடும் துயரமெல்லாம்
　　தூரத் தள்ளமனம் உயருமடா.

படித்துப் பழகாத பாமரருக்கும்
　　பாடிப் பருகஅதில் சேமமிருக்கும்
ஒடித்துப் பொருள்பிரிக்கும் சந்திகளில்லை;
　　ஊன்றிப் பதம்கூட்டும் பந்தனமல்ல,

காடும்மலையும் அதில் கலைவீசும்;
　　கடலும் ஞானம்தர அலைவீசும்;
பாடும் தேசிகவி நாயகத்தின்
　　பழமை பாடிடஎன் நாஉவக்கும்,

நோய்நொடி யாவையும் விட்டோடி
　　நூறு வயதும்சுகக் கட்டோடு
தாய்மொழி வளர்ந்தவன் கவிகாணும்
　　தனிவரம் தெய்வம் தரவேணும்.

# வ. உ. சிதம்பரம் பிள்ளை

சிதம்பரம் பிள்ளையென்று பெயர் சொன்னால்—அங்கே
சுதந்தர தீரம் நிற்கும் கண்முன்னால்
விதம்பல கோடி துன்பம் அடைந்திடினும்— நாட்டின்
விடுதலைக் கேயுழைக்கத் திடந்தருமே. (சிதம்)

அடிமை விலங்கையெல்லாம் அறுத்தெறியும்—நல்ல
ஆற்றல் கொடுக்கும் அவன் சரித்திரமே
கொடுமை பலசகிக்கும் குணம்வருமே—நாம்
கோரும் சுதந்தரத்தை மணந்திடுவோம் (சிதம்)

திலக மகரிஷியின் கதைபாடும்—போது
சிதம்பரம் பிள்ளைவந்து சுதிபோடும்
வலது புயமெனவே அவர்க்குதவி—மிக்க
வாழ்த்துக் குரிமைபெற்றான் பெரும்பதவி. (சிதம்)

திருக்குறள் படித்திட ஆசைவரின்— புதுச்
சிதம்பரம் பிள்ளைஉரை பேசவரும்
தருக்கிடத் தக்கபெரும் தமிழ்ப்புலமை—கற்றார்
தலைவணங்கிப் புகழும் தனிநிலைமை. (சிதம்)

சுதேசிக் கப்பல்விட்ட துணிகரத்தான்—அதில்
துன்பம் பலசகித்த அணிமனத்தான்
விதேச மோகமெல்லாம் விட்டவனும்—இங்கே
வீரசு தந்தரத்தை நட்டவனும்.

நாட்டின் சுதந்தரமே குறியாக—அதை
நாடி உழைப்பதுவே வெறியாக
வாட்டும் அடக்குமுறை வருந்துயரை—வெல்ல
வாழும் சிதம்பரத்தின் பெரும் பெயராம் (சிதம்)

# சிதம்பரம் பிள்ளை நினைவு

மடமையதோ பிறநாட்டார் மயக்கந் தானோ
மக்களெல்லாம் சுதந்தரத்தை மறந்தாராகி
அடிமை இருள் நள்ளிரவாய் அனைத்தும் மூடி
யாருந்தலை நீட்டவொண்ணு அந்நாளில்
திடமனத்துச் சிதம்பரப்பேர் பிள்ளையாவார்
செய்திருக்கும் அச்சமற்ற சேவை சொன்னால்
உடல் சிலிர்க்கும் உயிர்நிமிர்ந்து உணர்ச்சிபொங்கும்
உள்ளமெல்லாம் நெக்கு நெக்காய் உருகுமன்றோ.

எல்லாரும் தேசபக்தர் இந்நாளில்
எத்தனையோ சிறைவாசம் இனிதாய்க் காண்பார்
சொல்லாலும் எழுத்தாலும்விளக்க வொண்ணுத்
துன்பமெல்லாம் சிறைவாசம் அந்நாளில்
வல்லாளர் சிதம்பரனுற் சிறையிற் பட்ட
வருத்தமெல்லாம் விரித்துரைத்தால் வாய்விட்டேங்கி
கல்லான மனத்தவரும் கண்ணீர் கொட்டி
கனல்பட்ட வெண்ணெயெனக் கரைவார் இன்றும்.

சாதிகுலச் சமயமெல்லாம் கடந்த தக்கோர்
சமரசமும் சன்மார்க்கம் தழுவும் சான்றோர்
நீதிநெறி மிகப்பயின்ற பலபேர் சேர்ந்து
திருவியநம் காங்கிரசை நிதமும் போற்றி

## தமிழன் இதயம்

பேதமுற்றுப் பிணங்கிவிட நேர்ந்த போதும்
பெரியசபை அதை இகழ்ந்து பேசாநேசன்
ஓதி அதன் வளர்ச்சியையே விரும்பி வாழ்த்தி
உள்ளளவும் சிதம்பரந்தான் உவப்பான உள்ளம்.

பேசிவிட்டே சுயராஜ்யம் பெறலாம் என்று
பெரியபல தீர்மானக் கோவை செய்து
காசுபணப் பெருமையினால் தலைவ ராகி
காங்கிரசை நடத்தியதைக் கண்டு நொந்து
தேசநலம் த்யாகமின்றி வருமோ என்று
திலகர்பிரான் செய்தபெரும் கிளர்ச்சி சேர்ந்து
ஓசைபடா துழைத்தசில பெரியோர் தம்முள்
உண்மைமிக்க சிதம்பரனார் ஒருவராகும்.

உழுதுபல தொழில் செய்து உழைப்போ ரெல்லாம்
உணவும்உடை வீடின்றி உருகி வாட
பழுதுமிக அன்னியர்க்குத் தரக ராகிப்
பசப்புகின்ற வீணருக்கோ சுகங்கள்! என்று
அழுதுருகித் தொழிலாளர் இயக்கம் கண்டு
அந்நாளில் சிதம்பரனார் நட்ட வித்தாம்
விழுதுபல விட்டுபெரும் மரமாய் இன்று
வெவ்வேறு கிளைகளுடன் விளங்கக் காண்போம்.

கள்ளமற்றுக் கலகலத்த பேச்சுக்கேட்கும்
கறுப்பெனினும் சிரிப்புமுகம் கருணை காட்டும்
குள்ளமென்னும் ஓர் உருவம் இருகை கூப்பிக்
குண்டெடுத்துக் கடைந்ததெனக் குலுங்க நிற்கும்
வெள்ளையன்றி வேறு நிறம் அறியா ஆடை
வேதாந்த சித்தாந்த ஒளியே வீசும்
கொள்ளை கொள்ளை சிறையிருந்த குறிகள் தோன்றும்
குலவுபிள்ளைச் சிதம்பரத்தை நினைவு கூர்ந்தால்.

# சுப்ரமண்ய பாரதி

சுப்ரமண்ய பாரதியை நினைத்திட்டாலும்
சுதந்தரத்தின் ஆவேசம் சுறுக்கென் றேறும்;
இப்ரபஞ்சம் முழுதும் நமக்கினமாய் எண்ணும்;
'இந்தியன் நான்' என்றிடும்நல் விறுமாப் புண்டாம்;
எப்பெரிய காரியமும் எளிதாய்த் தோன்றும்;
எல்லையற்ற உற்சாகம் எழுந்து பொங்கும்
ஒப்பரிய 'தமிழன்' என்ற உவகை ஊறும்;
உள்ளமெல்லாம் துள்ளியெழும் ஊக்கமுண்டாம்.

அச்சமென்னும் பெரும்பேயை அடித்துப் போக்கும்.
அடிமைமன விலங்குகளை அறுத்துத் தள்ளும்
துச்சமென வருதுயரம் எதையும் தாங்கிச்
சுதந்தரத்தை விட்டுவிடாத் துணிவு தோன்றும்;
கொச்சைமிகும் பிறநாட்டு மயக்க மெல்லாம்
கூண்டோடு விட்டொழிக்கத் தெளிவு கூட்டும்
மெச்சிடும் தாய்நாட்டின் நாகரீகம்
மேன்மையெல்லாம் பாரதியார் பாட்டால் மேவும்.

தரித்திரத்தின் கொடுமையெல்லாம் சோர்ந்து வாட்டத்
தன்வீட்டில் உணவின்றித் தவித்த நாளும்
சிரித்தமுகம் மாறாமல் செம்மை காத்துத்
தேசத்தின் விடுதலையே சிறப்பா யெண்ணி

## தமிழன் இதயம்

தெருத்தெருவாய்த் தேசீயப் பஜனை பாடி
சென்னையிலும் உணர்ச்சிவரச் செய்த தீரன்
உருத்தெரியா திப்போதும் இங்கே நம்மை
ஊக்குவதும் பாரதியின் உரைக ளேயாம்.

பெண்ணுலகம் புதுமைபெறப் பழமை பேசிப்
பெருமை யவர் உரிமைகளைப் பெரிதும் போற்றி
மண்ணிலவர் இழிவுபெறச் செய்து வைத்தோர்
மடமைமிகும் கொடுமைகளை மறுத்துப்பாடி
கண்ணியத்தைப் பிற்காலக் கவிஞர் தம்முள்
காத்ததுநம் பாரதியின் கவியே யாகும்
எண்ணஎண்ணத் தமிழ்மொழிக்கோர் ஏற்றமாகும்
பாரதியின் திருநாமம் என்றும் வாழ்க.

எங்கேயோ எட்டாத உலகம் தம்மில்
இருப்பரென நாம் படித்த தெய்வம் எல்லாம்
இங்கேயே எம்முடனே எவரும் காண
ஏழைமக்கள் குடிசையிலும் இருப்ப தாக்கும்
சிங்காரப் புதுக்கவிகள் பலவும் பாடித்
தேவரெல்லாம் தமிழ்நாட்டில் திரியச் செய்தோன்
மங்காதாம் பாரதியார் நினைவைப் போற்றி
மறவாமல் தமிழ்நாட்டார் வாழ்த்த வேண்டும்.

# பாரதி பாட்டு

அச்சமிகும் பேடிமையின் அடிமை வாழ்வில்
அடங்கியிருந் தறம்மறந்த தமிழர் நாட்டை
பச்சைமரத் தாணியெனப் பதியும் சொல்லால்
பாடிசைத்துப் பாலர்களும் நிமிர்ந்து நின்று
நிச்சயமெந் தாய்நாட்டின் அடிமை வாழ்வை
நீக்காமல் விடுவதில்லை யெனமுன் வந்து
துச்சமெனச் சுகத்தையெல்லாம் துறந்து நிற்கத்
தூண்டியது பாரதியின் சொல்லே யாகும்.

படித்தறியா மிகஏழைக் கிழவ னேனும்
பாரதியின் பாட்டிசைக்கக் கேட்பா னாகில்
துடித்தெழுந்து தன்மெலிந்த தோளைக்கொட்டித்
தொளைமிகுந்த கந்தலுடைச் சுருக்கிக் கட்டி
எடுத்தெறிய வேணுமிந்த அடிமை வாழ்வை
இப்பொழுதே இக்கணமே என்றென் றார்த்து
அடித்துரைத்து ஆவேசம் கொள்வா னென்றால்
அப்பாட்டின் பெருமைசொல யாரே வல்லார்.

புத்தொளியிற் பழந்தமிழ்க்கோர் புதுமை பூட்டிப்
புத்துயிரும் புதுமணமும் புகுத்தி ஞானச்
சக்தியொளி மிகவிளங்கும் சொற்க ளாலே
தாய்நாட்டின் தளையறுக்கும் தவமே பாடி

## தமிழன் இதயம்

எத்திசையும் இளந்தமிழர் இன்று கூடி
இறந்தேனும் ஈன்றவளை மீட்போ மென்று
பக்தியொடு அறப்போரில் முனைந்து நிற்கப்
பண்ணினது பாரதியின் பாட்டேயாகும்.

எத்தாலும் பணந்தேடி இன்பம் நாடி
உண்டுடுத்து இறப்பதனை இகழ்ந்து தள்ளிப்
பித்தாகித் தான்பிறந்த பரத நாட்டின்
பிணிவீட்டல் ஒன்றினுக்கே பாடிப் பாடி
முத்தாதி மணிகளென்றும் சொற்க ளோடு
முப்பழத்தின் சுவைகூட்டி முனிவி லாது
சத்தான வீரத்தின் சாறும் சேர்த்துக்
கவிசமைத்த பாரதியின் தகைமை என்னே!

நடித்தொழுகித் துதிபாடி நலங்கள் நாடி
நரைதிறந்து மறைந்திடும்நாவலர்போ லன்றி
வெடித்தெழுந்த பக்தியொடு பரத நாட்டின்
விடுதலைக்குப் பாடுவதே வெறியாய்க் கொண்டு
இடித்தெழுந்து தேன்மொழியும் சொற்க ளோடு
இளங்கதிரும் முழுமதியும் இணைந்தா லென்னப்
பொடித்துடலம் புளகமுற அச்சம் போக்கிப்
புகழ் புரியும் பாரதியின் புலமை தானே.

மேனாட்டுப் புதுமொழிகள் வளர்ந்து நாளும்
மிகக்கொழுத்துப் பளபளத்து மேன்மை மேவ
மிக்கசுவைப் பழந்தமிழ்த்தாய் மெலிந்தா ளென்றும்
தாய்நாட்டைத் தமிழ்மொழியை மறந்தீர் ஐயோ!
தமிழர்களே! தளதளத்து மூச்சு வாங்கித்
தலை வணங்கி உடல் சுகித்தீர் தவத்தால் மிக்க
வானாட்டுத் தேவர்களும் அறிந்திடாத
வளமிகுத்து செழுசெழுத்து வாழ்ந்த நாட்டை

## தமிழன் இதயம்

வறுமைதரும் அடிமையினில் வைத்தீ ரென்று
பாநாட்டிப் பலவழியிற் பாடிப் பாடிப்
படித்தவுடன் பதைபதைக்க வீரமூட்டும்
பாரதியார் பாடல்களின் பண்தான் என்னே!

பாலொழுகும் சிறுகுதலை மகனைப் பார்த்து
"படையெடுத்தார் பகையாளர்; மகனே நீபோய்
வெலொழுகும் போர்க்களத்தில் வெல்வா யன்றேல்
வெம்படையை மருமத்தில் வாங்" கென் றேவும்
சீலமிகும் பெண்மணிகள் திகழ்ந்த நாட்டைச்
சிற்றடிமைக் கொப்பிவிற் றுத் தின்றீ ரென்று
தாலுழுது பறைசாற்றித் தமிழ்ப்பா வோதித்
தட்டியெழுப் பராதியார் தாமே செய்தார்.

'அருமகனைத் தேர்க்காலில் அரைத்த வேந்தும்
பழியஞ்சித் தன் கையை அரிந்த கோனும்
தருமமிலைக் கோவலனைக் கொன்ற தென்று
தானறிந்த அக்கணமே சவமாய் வீழ்ந்த
பெருமையுள்ள திறல்வேந்தர் பின்னே வந்தீர்
பித்தடிமைக் குற்றேவல் பிழைத்தீ' ரென்று
உருகிமனம் விரிந்துயரும் கவிக ளாலே
உணர்வளித்த பாரதியின் உரைதான் என்னே!

பாரிமுதற் சடையப்ப வள்ள லென்று
பாவலர்கள் நாவிலுறை பலபோர் வாழ்ந்து
சீரிலகும் தமிழ்மொழியின் இனிய ஓசை
திசையனைத்தும் போயொலிக்கச் செய்த நாட்டில்
ஊறியநற் சுவையொழுகும் கவிக ளாலே
ஊக்கமிகத் தமிழ்நாட்டிற் குணர்வைத் தந்த
பாரதியார் மிகக்கொடிய வறுமை மேவப்
பார்த்திருந்த தமிழருற்ற பழிதான் என்னே!

## தமிழன் இதயம்

சோற்றினுக் கறிவை விற்றுத்
தூர்த்தரைப் புகழ்ந்து பாடிச்
சோம்பரைச் செல்வ ரென்று
தொழுதுடல் சுகித்து வாழ்ந்து
கூற்றினுக் குடலம் போகக்
குப்பையிற் கவிகள் சேரக்
குறிவிடா திறந்து போகும்
கவிகளின் கூட்டம் சேரார்
வேற்றவர்க் கடிமை நீங்கும்
விடுதலை வரமே வேண்டி
வீரமும் ஞானம் பொங்கச்
சக்தியின் வேள்வி பாடி
நாற்றிசைத் தமிழ ரெங்கும்
நாட்டினைப் பணியச் செய்த
நாவலர் சுப்ர மண்ய
பாரதி நாமம் வாழ்க.

# உ. வே. சாமிநாத ஐயர்

பேச்செல்லாம் தமிழ்மொழியின் பெருமைபேசி
பெற்றதெல்லாம் தமிழ்த்தாயின் பெற்றியென்று
மூச்செல்லாம் தமிழ்வளர்க்கும் மூச்சே வாங்கி
முற்றும் அவள் திருப்பணிக்கே மூச்சை விட்டான்
தீச்சொல்லும் சினமறியாச் செம்மை காத்தோன்
திகழ்சாமி நாதஐயன் சிறப்பை யெல்லாம்
வாய்ச்சொல்லால் புகழ்ந்துவிடப் போதா துண்மை
மனமாரத் தமிழ்நாட்டார் வணங்கத் தக்கோன்.

அல்லும்பகல் நினைவெல்லாம் அதுவே யாக
அலைந்தலைந்து ஊரூராய்த் திரிந்து நாடி
செல்லரித்த ஏடுகளைத் தேடித் தேடி
சேகரித்துச் செறுகலின்றி செப்பம் செய்து
சொல்லரிய துன்பங்கள் பலவும் தாங்கி
சோர்வறியா துழைத்தஒரு சாமி நாதன்
இல்லையெனில் அவன்பதித்த தமிழ்நூ லெல்லாம்
இருந்தஇடம் இந்நேரம் தெரிந்தி டாதே.

சாதிகுலப் பிறப்புகளாற் பெருமை யில்லை
சமரசமாம் சன்மார்க்க உணர்ச்சி யோடு
ஓதிஉணர்ந் தொழுக்கமுள்ளோர் உயர்ந்தோர்என்னும்
உண்மைக்கோர் இலக்கியமாய் உலகம் போற்ற

## தமிழன் இதயம்

ஜோதிமிகும் கவிமழைபோல் பொழிமீனாட்சி
    சுந்தரனும் தன்குருவைத் தொழுது வாழ்த்தி
வேதியருள் நெறிபிசகாச் சாமிநாதன்
    விரித்துரைக்கும் சரித்திரமே விளங்கிநிற்கும்.

மால்கொடுத்த பிறமொழிகள் மோகத் தாலே
    மக்களெல்லாம் பெற்றவளை மறந்தார்; ஞானப்
பால்கொடுத்த தமிழ்த்தாயார் மிகவும் நொந்து
    பலமிழந்து நிலைதளர்ந்த பான்மை பார்த்து
கோல்கொடுத்து மீட்டுமவள் கோயில் சேர்த்து
    குற்றமற்ற திருப்பணிகள் பலவும் செய்து
நூல்கொடுத்த பெருமைபல தேடித் தந்த
    நோன்பிழைத்த தமிழ்த்தவசி சாமி நாதன்

# பிரார்த்தனை

உலகெலாம் காக்கும் ஒருதனிப் பொருளே
உன்னருள் நோக்கி இன்னு மிங்குள்ளோம்.
இந்திய நாட்டை இந்தியர்க் கென்று
தந்தனை யிலையோ தவறதில் உண்டோ
காடும் மலைகளும் கனிதரும் சோலைகள்
ஓடும் நதிகளும் உள்ளன எவையும்
இங்கே பிறந்தவர் எங்களுக் கிலையோ!
எங்கோ யாரோ வந்தவர் துய்க்கச்
சொந்த நாட்டினில் தோன்றிடும் செல்வம்
எந்த நாட்டிலோ எங்கோ போய்விடக்
கஞ்சியு மின்றிக் கந்தையும் இன்றி
அஞ்சிய வாழ்வின் அடிமையிற் கிடந்து
நொந்தனம் கொள்ளை நோய்களாற் செத்துக்
காட்டிடை வாழும் விலங்கினும் கேடாய்
நாட்டிடை யிருந்தும் நலிந்தனம் ஐயோ!
யாருடை நாடு? யாருடை வீடு?
யாருடைப் பாடு? யார் அநு பவிப்போர்!
பிறந்த நாட்டினிற் பிறவா தவரிடம்
இரந்து நின்று அவர் ஏவலே செய்து
உடலே பெரிதென உயிரைச் சுமந்திடும்
ஊனமிவ் வாழ்வினை ஒழிந்திடத் துணிந்தோம்
ஞான நாயகா! நல்லருள் சுரந்து,

# தமிழன் இதயம்

ஆண்மையும் அறிவும் அன்பும் ஆற்றலும்
கேண்மையும் பிறர்பால் கேடிலா எண்ணமும்
அடிமை ஒருவருக் கொருவர் என்றில்லாக்
குடிமை நீதியின் கோன்முறை கொடுத்து,
சோறும் துணியும் தேடுவ தொன்றே
கூறும் பிறவின் கொள்கை யென்றின்றி
அளவிலா உந்தன் அருள் விளை யாட்டின்
களவியல் போன்றக் கருணையின் பெருக்கின்
உளவினைத் தேடி உணர்ந்திட வென்றே
வளமும் எங்கள் வாழ்நாட் போக்கி
மங்களம் பாடி மகிழ்ந்திடத் தருவாய்
எங்கும் இருக்கும் எழிலுடைச் சோதி !

# இந்தியத் தாய் தோத்திரம்

பல்லவி

தாயே வந்தனம்—இந்தியத்
தாயே வந்தனம்

அனுபல்லவி

தாரணிதன்னில் வேறிலை இணையெனப்
பூரண வளந்திகழ் புண்ணிய பூமியெந் (தாயே)

சரணம்

நிலவளம் நீர்வளம் நிறைந்ததுன் நாடு
நீண்ட உன் பரப்பிலும் வேறிலை ஈடு
விலையிலும் விளைவிலும் மலிந்ததுன் தேசம்
வேண்டிய யாவும்உன் எல்லையில் வாசம். (தாயே)

முப்பதும் பத்தும் கோடிஉன் மக்கள்
மூவுலகத்தையும் ஆண்டிடத் தக்கார்
அற்புதமாகிய ஆற்றல்கள் நிறைந்தாய்
அறியாத் தனத்தால் அடிமையில் இருந்தோம். (தாயே)

படை யெடுத்தவரும் பசி யெடுத்தவரும்
பற்பல நாட்டார் உனையடுத்தவரை
அடைவுடன் அத்தனைப் பெயரையும் தாங்கி
ஆதரித்தாண்டஉன் அருங்குணம் ஓங்க, (தாயே)

## தமிழன் இதயம்

பாஷைகள் பற்பல படித்தவள் நீயே
படித்ததன் பயன்பெறும் நடத்தையுள் ளாயே
ஆசைகள் அகற்றிய அறங்களிற் சிறந்தாய்
அன்பின் வழிகளை அனைத்தையும் அறிந்தாய், (தாயே)

ஞானமுங் கலைகளுக் கிருப்பிடமாவாய்
நாகரிகத்தின் பிறப்பிடமாவாய்
தானமும் தவங்களைத் தாங்கின தன்மை
தருமம் யாவையும் தழைத்தது மிங்கே. (தாயே)

மதவெறிக் கொடுமையை மாற்றும்உன் பொறுமை
மற்றவர் மதத்தையும் போற்றுமுன் பெருமை
சதமெனும் சத்திய சாந்தியை உரைப்பாய்
சன்மார்க் கத்தவர் சிந்தையில் இருப்பாய். (தாயே)

# சுதந்தரம் வேண்டும்

கண்ணொளி யின்றி மற்றக்
கட்டழ கிருந்தா லென்னப்
பண்ணொளி இனிமை யூட்டாப்
பாட்டுகள் கேட்ப தென்னப்
புண்ணியப் புகழோன் றில்லாப்
பொற்பொதி யுடையார் போலும்
திண்ணிய சுதந்தரத்தின்
தெரிசனம் இல்லா வாழ்க்கை.

உண்டிகள் பலவும் செய்து
உப்பிலா துண்ணல் போலும்
கண்டொரு இனிமை சொல்லக்
கனிவிலான் விருந்து போலும்
பெண்டரும் அழகு மிக்காள்
பிரியமில் லாமை யொக்கும்
தொண்டுசெய் துரிமை யின்றிச்
சுகித்துடல் வளர்க்கும் வாழ்க்கை.

அன்பறம் வளர்ந்தி டாது
ஆற்றலும் அறிவும் குன்றும்,
வம்புகள் சூதும்வா தும்
வழக்குகள் வளரும் வாழ்வின்

## தமிழன் இதயம்

இன்பமும் ஊக்கமும் ஆண்மை
 எழுச்சியும் இன்றி என்றும்
துன்பமும் சோம்பல் சூழும்
 சுதந்திரம் இல்லா நாட்டில்.

கல்வியும் கலைகள் யாவும்
 களைமிகும் பயிர்க ளாகும்
செல்வமும் புகழும் தேயும்
 செருக்கவர் தருக்கி வாழ
நல்லவர் வருந்தி வாட
 நடுநிலை ஞாயங் கெட்டுத்
தொல்லைகள் கட்சி கட்டும்
 சுதந்தரம் இழந்த நாட்டில்.

இச்சைபோல் இருந்து வாழ
 ஈப்புழு எறும்பும் கோரும்
உச்சமாம் மனித ஜென்மம்
 சுதந்தர உணர்ச்சி யின்றி
நச்செனும் அடிமை வாழ்வை
 நயந்திட ஞாய முண்டோ?
நிச்சய சபதம் பூண்டு
 சுதந்தரம் நிலைக்கச் செய்வோம்

உலகினுக் கறிவு தந்து
 உண்மைகள் மிகுந்து ஞானக்
கலைகளைக் கணித்துஜீவக்
 கருணைசேர் நமது நாடு
பலபலக் கொடுமை முற்றிப்
 பதைத்திடும் பிறநாட்டார்க்கு
நலமெடுத் துரைக்க வேணும்
 சுதந்தரம் நமக்குவேண்டும்.

# சுதந்தரம் யாது ?

அச்சம் விட்டது சுதந்தரம்
அன்பு விடாதது சுதந்தரம்
இச்சைப் படிசெயல் சுதந்தரம்
இடர்செய் யாதது சுதந்தரம்
பிச்சை கொள்ள விரும்பாது
பிறருக் கீய வருந்தாது
கொச்சை மொழிகளைச் சொல்லாது
கோணல் வழிகளிற் செல்லாது

மடமை விட்டது சுதந்தரம்
மானம் விடாதது சுதந்தரம்
கடமை கற்றது சுதந்தரம்
கபடம் அற்றது சுதந்தரம்
கொடுமை கண்டு பொறுக்காது
கொடியர் தமையும் வெறுக்காது
அடிமை செய்து சுகிக்காது
யாரையும் அடிமை வகிக்காது.

கொல்லக் கூசும் சுதந்தரம்
கொள்கைக் குயிர் தரும் சுதந்தரம்
எல்லை விட்டு நடக்காது
எதிரியை ஒண்டி மடக்காது.

## தமிழன் இதயம்

வெல்லற் கேனும் பொய்யாது
வேற்றுமைக் காரரை வையாது
பல்லைக் கெஞ்சிப் பிழைக்காது
பட்டதன் தோல்வி ஒளிக்காது.

தன்சோறுண்பது சுதந்தரம்
தன் துணி யணிவது சுதந்தரம்
என்னே வறுமை வந்தாலும்
எத்தனை துன்பம் தந்தாலும்
தன்னோர் செம்மை பிரியாது
தன் குறை சொல்லித் திரியாது
பொன்சேர் போகம் மதிக்காது
பொய்ப்புகழ் பாடித் துதிக்காது.

தாழ உரைப்பது சுதந்தரம்
தன்மதிப் புள்ளது சுதந்தரம்
ஏழை செல்வனென் றெண்ணாது
எவருக் கும்குறை பண்ணாது
ஊழிய னாகப் பணிசெய்யும்
உலகுக் கெல்லாம் அணிசெய்யும்
வாழிய மக்கள் எல்லோரும்
வாழிய வென்றே அதுகோரும்.

# சுகவாழ்வு

சுதந்தரம் இல்லாமல் இருப்பேனோ ?—வெறும்
சோற்றுக் குயிர் சுமந்(து) இறப்பேனோ ! (சுத)

விடுதலை யடையாமல் விடுவேனோ ?—என்னை
விற்றுடல் வளர்ப்பதில் கெடுவேனோ ! (சுத)

மானத்தைப் பெரிதென்று மதிப்பேனோ ?—அன்றி
மாற்றவர்க் குழைத்துடல் நசிப்பேனோ ! (சுத)

தொழுதுடல் சுகிப்பதைத் தொலைப்பேனோ ?—இன்றித்
தொழும்பனென் றேபெயர் நிலைப்பேனோ ? (சுத)

பயமின்றித் தருமத்திற் குழைப்பேனோ ?—விட்டுப்
பாவங்களுக் கொதுங்கிப் பிழைப்பேனோ ! (சுத)

ஞான சுதந்தரத்தை அடைவேனோ ?—இந்த
ஊனுக்குழைத் தடிமை தொடர்வேனோ ! (சுத)



10

# இச்சா சுதந்தரம்

இச்சை கொண்ட நிமிஷமே
நிச்சயம் சுதந்தரம்;
பிச்சை கேட்க வேண்டுமோ
பிறர் கொடுக்கவல்லதோ ?

'வேண்டும்' என்ற உறுதியே
விடுதலைக்கு வழிவிடும் !
யாண்டிருந்து வருவது ?
யார்கொடுத்துப் பெறுவது ?

'அடிமையல்ல நான்' எனும்
ஆண்மையே சுதந்தரம்;
தடியெடுக்க வேண்டுமோ ?
சண்டையிட்டு வருவதோ ?

ஆசைவிட்ட பொழுதிலே
அடிமை வாழ்வும் விட்டிடும்;
மீசை துள்ளி வாயினால்
மிரட்டினால் கிடைப்பதோ ?

அஞ்சுகின்ற தற்றபோது
அடிமையற்றுப் போகுமே;
நஞ்சுகொண்டு யாரையும்
நலிவுசெய்து தீருமோ ?

நத்தி வாழ்வ தில்லையென்ற
நாளிலே சுதந்தரம்;
கத்தி கொண்டு யாரையும்
குத்தினாற் கிடைக்குமோ?

கள்ளமற்ற நேரமே
காணலாம் சுதந்தரம்;
உள்ளிருக்கும் ஒன்றை வேறு
ஊரிலார் கொடுப்பவர்?

தீமையோடு உறவுவிட்ட
திண்மையே சுதந்தரம்
வாய்மையோ(டு) உறவுறாத
வன்மையே சுந்தரம்

# என்னுடை நாடு

"இந்திய நாடிது என்னுடை நாடு"
என்று தினந்தினம் நீயதைப் பாடு
சொந்தமில் லாதவர் வந்தவர் ஆள
தூங்கிக் கிடந்தது போனது மாள
வந்தவர் போனவர் யாரையும் நம்பி
வாடின காலங்கள் ஓடின தம்பி
இந்தத் தினமுதல் "இந்திய நாடு
என்னுடை நாடெ"ன்ற எண்ணத்தைக் கூடு.

கன்னி இமயக் கடலிடை நாடு
கடவுள் எமக்கெனக் கட்டிய வீடு
என்ன முறையிது ஏனிதை வேறு
இன்னொரு நாட்டவர் ஆள்வது கூறு
சொன்னவர் கேட்டவர் யாரையும் நம்பி
சோர்ந்து கிடந்தது தீர்ந்தது தம்பி
என்னுடை நாட்டினை நானிருந்தாள
இந்தத் தினம்முதல் எண்ணுவன் மீள.

தன்னுடை வேலையைத் தான்செய்வ தாலே
தப்பு வந்தாலும் சுதந்தரம் மேலே
இன்னொரு யாருக்கும் இதிலென்ன கோபம்
எந்தன் உரிமைசொன் னலென்ன பாபம்

## தமிழன் இதயம்

அன்னியர் ஆள்வதில் நன்மைவந்தாலும்
அடிமையின் வாழ்வது நரகம் எந்நாளும்
என்னுடைய வீட்டுக்கு நான் அதிகாரி
என்பது தான்சுய ராஜ்ஜிய பேரி.

பாரத நாடெந்தன் பாட்டனின் சொத்து
பட்டயத் துக்கென்ன பஞ்சாயத்து?
யாரிதை வேறொரு அன்னியர் ஆள
அஞ்சிக் கிடந்தது போனது மாள
'வாரவர் போறவர்' யாரையும் நம்பி
வாடின காலங்கள் ஓடின தம்பி
வீரமும் தீரமும் வெற்றுரை யாமோ
விடுதலை வேண்டுதல் விட்டிடப் போமோ.

'முத்தமிழ் நாடெந்தன் முன்னையர் நாடு
முற்றிலும் சொந்தம் எனக்' கெனப் பாடு
சற்றும் உரிமையில் லாதவர் ஆள
சரிசரி யென்றது போனது மாள
பக்தியின் அன்பினில் பணிபல செய்வோம்
பயப்பட்டு யாருக்கும் பணிந்திடல் செய்யோம்
சத்தியம் சாந்தத்தில் முற்றிலும் நின்றே
சடுதியில் விடுதலை அடைவது நன்றே.

# தேசத் தொண்டு

பல்லவி

தேசத் தொண்டுகள் செய்திடுவோம்
தெய்வம் துணைவரக் கை தொழுவோம். (தே)

சரணம்

நம்முடை நாட்டை நாம் ஆள
நன்மைகள் முன்போல் இனிமீள
எம்முடை ராஜ்ஜியம் இதுவென்றே
இந்தியர் மகிழ்ந்திடச் சொந்தமென்றால். (தே)

பஞ்சக்கொடுமையை ஒழித்திடவும்
பாரதநாடினிச் செழித்திடவும்
அஞ்சும் அடிமைத்தனம் நீங்கி
அன்பின் ஆண்மை வேண்டுமென்றால். (தே)

சோறும் துணியும் இல்லாமல்
சோம்பியிங் கெவரும் நில்லாமல்
வீறும் புதுமைப் பொதுவாழ்வின்
விடுதலை யின்பம் வெண்டுமென்றால். (தே)

பட்டினி கிடப்பவர் இல்லாமல்
படிக்கா தவரெனச் சொல்லாமல்
எட்டின மட்டிலும் எல்லாரும்
இன்புறும் ராஜ்ஜியம் தென்படவே. (தே)

## தமிழன் இதயம்

இந்தியர் எல்லாம் ஒரு ஜாதி
யாருக்கும் இங்கொரு நீதி
நொந்தவர் ஒருவரும் இல்லாத
நூதன அரசியல் உண்டாக்க. (தே)

ஜாதிக்கொடுமைகள் நீங்கிடவும்
சமரச உணர்ச்சிகள் ஓங்கிடவும்
நீதிக்கெல்லாம் இருப்பிடமாய்
நிற்குமோர் அரசியல் உருப்படவே. (தே)

வரிகளை யெல்லாம் குறைத்திடவே
வரும்படி விளைவுகள் நிறைத்திடவே
விரிகிற பொதுப்பணச் செலவையெல்லாம்
வெட்டிச் சிக்கனம் தொட்டிடவும். (தே)

பணத்தின் பெருமையைப் போக்கிவைப்போம்
பண்டங் களின்விலை தூக்கிவைப்போம்
குணத்தின் பெருமைகள் இல்லாத
குலமும் பிற இனிச் செல்லாது. (தே)

மனிதனை மனிதன் ஏய்ப்பதையும்
மக்களைப் போரில் மாய்ப்பதையும்
தனியொரு வழியில் தடுத்திடவோர்
தருமம் உலகினில் தழைத்திடவே. (தே)

சத்தியவாழ்வினை நாடுதற்கும்
சாந்தப் பெருமைகள் கூடுதற்கும்
உத்தமக் காந்தியின் உபதேசம்
உலகுக்கோதும் நம்தேசம். (தே)

தாழ்ந்தவரென்பார் இங்கில்லை
வறுத்திரம் நமக்கினிப் பங்கில்லை
வாழ்ந்திடும் வரையிலும் புகழ்செய்வோம்
தானிலும் உயர்வாய் வாழ்ந்திடுவோம். (தே)

# " சுதந்தரமில்லா ஒரு நாடு "

சுதந்தரத் திருநாள் தொழுவோம்—நாம்
துன்பம் தொலைந்தினி எழுவோம்—ஆம்!
நிதந்தரும் சரித்திரம் நீங்கிடுவோம்
நீதியும் அறங்களும் ஓங்கிடுவோம். (சுத)

கோயில் குளங்களை இடித்தெறியும்
குழந்தைகள் பெண்களைக் கொலைபுரியும்
பேயின் கூத்தினைத் தடுத்திடவே
பெரிதும் சுதந்தரம் தொடுத்திடுவோம். (சுத)

மூர்க்கர்கள் உலகினை ஆள்வதையும்
முற்றிலும் தருமம் தாழ்வதையும்
போக்கிடச் சுதந்தரம் வேண்டிடுவோம்
புண்ணிய முறைகளில் ஆண்டிடுவோம். (சுத)

பகைவர்கள் தங்களுக் குபசாரம்
பக்தரைச் சிறையிடும் அபசாரம்
நகை மிகும் அரசியல் முறை மாற
நம்முடைச் சுதந்தரம் நிறைவேற. (சுத)

சுதந்தரம் இல்லா ஒரு நாடு
சூழ்புலி பேய் மிகும் பெருங்காடு
எதிர்ந்திடும் துயர்களைச் சகித்திடுவோம்
எம்முடைச் சுதந்தரம் வகித்திடுவோம். (சுத)

பொது ஜனநாயக முறைகாணும்
பூரண சுதந்தரம் பெறவேணும்
எதுதடை நேரினும் அஞ்சாமல்
எவரையும் அதற்கினிக் கெஞ்சாமல். (சுத)

# சுதந்தரச் சபதம்

அவரவர் உழைப்பின் பலன்களை முழுதும்
அவரவர் உரிமையால் அடைந்து
சுவையுள வாழ்க்கைக் கவசிய மான
பொருளெலாம் சுலபமாய்க் கிடைத்துப்
புவியினில் எல்லா வசதியும் பெற்றுப்
பூரண வளர்ச்சியில் பொலிதல்
எவரொரு பேர்க்கும் மறுக்கொணா உரிமை
இந்தியர் எமக்குமாம் இதுவே.

இயற்கையா மிந்த உரிமையைப் பறிக்க
இடையிலே தடையென நின்று
செயற்கையா லடக்கிக் கொடுமைகள் புரியும்
தீமைசேர் அரசியல் எதையும்
முயற்சியால் திருத்த முடியாது போனால்
முற்றிலும் அதனையே நீக்கி
அயர்ச்சியில் லாத வேறொரு அரசை
அமைப்பதும் குடிகளின் உரிமை.

ஆங்கில ஆட்சி இந்திய நாட்டை
அடிமைநா டாக்கின தோடு
தாங்களே சுகிக்கும் தந்திரம் முறையால்
தரித்திரம் தலைவிரித் தாட

ஈங்குள ஏழைக் குடிகளின் வளத்தை
ஈப்புலி என்னவே உறிஞ்சி
ஓங்கிய செல்வம், அரசியல், ஆன்ம
உணர்ச்சியும் கலைகளும் ஒழித்தார்.

ஆதலால் இந்த ஆங்கிலத் தொடர்பை
அடியொடும் அகற்றிட வேண்டும்
பூதலம் அறிந்த பூரண மாட்சுய
ராஜ்ஜியம் புதியதா யமைத்து
ஏதொரு நாடும் ஆதிக்க மெதுவும்
இந்நாட் டெதிலு மில்லாத
நீதிலா நிலையை அடைந்திடல் நன்மை
திடமுடன் நம்பினோம் இதையே.

அந்த நன்னிலையை அடைந்திட நமக்கு
அதிகமாய்ப் பலன்தரும் மார்க்கம்
நிந்தனை மிகுத்த கொலைவழி யல்ல
நிச்சயம் கண்டு கொண்டோமால்
முந்திநாம் கொண்ட சாத்விக முறையால்
முற்றிலும் முன்னேற்ற மடைந்தோம்
இந்தியா இனியும் அதனையே தொடர்ந்து
எண்ணிய சுதந்தரம் எய்தும்.

உத்தம மான சாந்தநல் வழியில்
உரிமையாம் சுதந்தர மடைய
நித்தியமான பரம்பொருள் சாட்சி
நியந்தனை சிலதுமேற் கொண்டு

பத்திய மாக அதன்படி நடந்து
பணிசெய்வோம் என்றுநாம் இன்று
சத்தியம் செய்து சபதமும் கொள்வோம்
சந்ததம் இந்தியா வாழ்க.

சாந்த வாழ்விற்கும் சாத்விகப் போர்க்கும்
ஜனங்களைத் தகுதியாக் கிடவும்
கூர்ந்து நாம் கொண்ட நிர்மாணத் திட்டம்
குறைவற நாட்டினிற் பரவி
சார்ந்தநற் கதரும் சாதிகள் சமயச்
சமரச சல்லாப வாழ்வும்
தேர்ந்தநற் சேவை தீண்டாமை ஒழித்தல்
சிறப்புறச் செய்திடல் வேண்டும்.

எட்டிய மட்டும் ஜனங்களுக் குள்ளே
சமரச எண்ணமே பரப்பி
முட்டிடும் சாதிச் சண்டைகள் நீக்கி
முரண்படு வேற்றுமை மாற்றி
பட்டினிப் பஞ்சம் படிப்பிலாத் தன்மை
பற்பல கொடுமையால் நொந்து
ஒட்டுதல் மறுத்து ஒதுக்கின பேரை
உயர்த்திடப் பலவிதம் உழைப்போம்.

ஆங்கிலர் நடத்தும் ஆதிக்க மதனை
அழித்திட அமைத்துளோம் எனினும்
நாங்களோர் நாளும் இங்லீஷ் காரர்
நாசத்தை விரும்பிட மாட்டோம்;

ஈங்குள அவர்கள் எத்தொழில் செயினும்
இன்பமாய் வாழ்ந்திட இசைவோம் ;
தாங்களே எஜமான் என்றிடும் தருக்கைத்
தடுப்பதே நாம் கொண்ட வேலை.

இந்துக்களிடையே தீண்டாத பேர்கள்
ஹரிஜன ஏழைகள் தம்மைப்
பந்துக்கள் போலப் பரிவுடன் நடத்தி
அவருடன் பழகுதல் வேண்டும் ;
நிந்தித்து நீக்கல் சாத்வீக நெறிக்கு
நிச்சயம் தடையென நிற்கும் ;
சிந்தித்து நமது தினசரி வாழ்வில்
தீண்டலை மறந்திடல் சேவை.

மதங்களின் பெயரால் மாறுபட்டிடினும்
மற்றுநம் சுகதுக்க மெல்லாம்
நிதங்கலந் தெல்லா விதத்திலும் பின்னி
நீக்கொணுத் தொடர்புகள் உடைத்தாம் ;
இதங்கலந் திடநாம் இந்தியத் தாயின்
மக்களே என்பதை நினைத்து,
விதங்களை மறந்து வேற்றுமை துறந்து
விரவிநாம் நடத்திடல் வேண்டும்.

கதரும் ராட்டையும் கண்களாம் நமக்குக்
கருதிடல் நிர்மாணக் கணக்கில் ;
எதிலும் சுகமிலா ஏழைக் கிராமம்
எழுநூறாயிரம், அவற்றில்

பதிலும் பேசிடாப் பாமர மக்களின்
பட்டினிக் கொடுமையை மாற்றக்
கதியதாய் அவர்க்குப் புத்துயிர் கொடுக்கக்
கைத்தொழில் ராட்டையும் கதராம்.

ஆகையால் நாமும் அனுதினம் நூற்போம்
ஆடையும் கதரன்றி அணியோம்;
போகமாய் கிராமக் கைத்தொழில் செய்த
பொருளையே கூடிய மட்டும்
ஓகையால் வாங்கிப் பிறரையும் அதற்கே
உதவிடத் தூண்டுவோம் உண்மை;
சாகுமோ என்னும் கைத்தொழில் எல்லாம்
தழைத்துயிர் பெற்றிடச் செய்வோம்.

காங்கிரஸ் கொள்கைக் கட்டளை தம்மைக்
கடமையிற் பணிவுடன் காப்போம்;
ஓங்கிடும் போது சத்தியப் போரில்
உவப்புடன் கலந்துகொள் வதற்கே
ஆங்கது கூவி அழைத்ததும் உதவ
ஆயத்த மாகவே இருப்போம்;
ஈங்கிது எங்கள் சத்தியம் சபதம்
இந்தியா சுதந்தரம் பெறவாம்.

# சுதந்தரத் திருநாள்

இந்திய நாட்டின் சுதந்தரத் திருநாள்
இன்பம் யாவையும் இனிமேல் தருநாள்
செந்தமிழ்த் தாயின் திருப்புகழ் பாடித்
தெய்வம் தொழுவோம் யாவரும் கூடி

அன்னிய ஆசைகள் அனைத்தையும் ஒழித்தோம்;
'அடிமை' என்னும் சொல்லையும் அழித்தோம்;
பொன்னையும் சுகத்தையும் செலவழித் தேனும்
பூரண சுதந்தரம் அடைந்திட வேணும்.

அன்பின் ஆண்மையும் ஆற்றலும் வளரும்
அன்னை பாரதத் தாய்மனம் குளிரும்
துன்பம் யாவையும் தொலைத்திட முடியும்
சோற்றுத் தரித்திர மாவது விடியும்.

முச்சுடர் ஒளிதரும் நம்கொடி நிழலில்
முற்றிலும் சத்திய சாந்தநல் வழியில்
மெச்சிடும் நன்மைகள் மிகமிகக் கொடுப்போம்
மேதினி எங்கணும் கொடுங்கோல் தடுப்போம்

எல்லாத் தேசமும் எமக்கினி உறவாம்;
எவரும் செய்திடும் நன்றியை மறவோம்;
நல்லார் யாரையும் நலமுறக் காப்போம்;
நலிப்பவர் யாவரும் நடுங்கிடப் பார்ப்போம்.

சுதந்தரம் சுதந்தரம் சுதந்தரம் ஒன்றே
சுகந்தரும் சுகந்தரும் சுகந்தரும் என்றும்
பதந்தரும் பலந்தரும் பரமனைக் காணும்
பக்தியென் பவருக்கும் சுதந்தரம் வேணும்.

# சும்மா கிடைக்குமோ?

பல்லவி

சும்மா கிடைக்குமோ சுதந்தர சுகமது—மனமே!

அனுபல்லவி

சுத்தமும் பக்தியும் சத்தியம் இல்லாமல்
சூரமும் வீரமும் சொல்லுவ தால்மட்டும் (சும்மா)

சரணங்கள்

உழுது பயிரிடாமல் உணவுகள் கிடைக்குமோ?
உழைப்பும் களைப்புமின்றி உரிமைகள் அடுக்குமோ?
அழுது அழுதுருகி அன்பின் கண்ணீர்பெருக
ஆர்வத்தால் அனைவர்க்கும் சேவைகள் செய்யாமல்
(சும்மா)

என்னுடைச் சுகங்களில் இம்மியும் குறையாமல்
எல்லாரும் தியாகம் செய்ய இல்லையென் றேசுவேன்,
'சொன்னதைச் செய்வதும் செய்வதே சொல்வதும்'
சுலபமோ நான் அந்தச் சுத்தத்தில் குளிக்காமல் (சும்மா)

ஒற்றுமை பேசுவேன் உடன்கூடி நிற்காமல்
ஒவ்வொரு சமயத்தில் வெவ்வேறு சொல்லுவேன்
கற்றஎன் வித்தையைக் காட்டின தேயன்றி
கசிந்து கசிந்துருகிக் காரியம் செய்யாமல் (சும்மா)

சத்தியம் சாந்தமென்பேன் சட்டென் றதைவிடுத்துச்
சரித்திரப் படிஅது சரியல்லவென்று சொல்வேன்
வைத்தஎன் கொள்கையில் வைராக்ய மில்லாமல்,
வார்த்தைக்கும் செய்கைக்கும் வேற்றுமை விலகாமல்
(சும்மா)

# சுதந்தர சூரிய உதயம்

## பல்லவி

சுதந்தர சூரியன் உதிக்கிற நேரம்
தூங்காதே தமிழா! (சுதந்)

## அனுபல்லவி

விதம்வித மாகிய புதுமணம் விரிந்திடும்
விண்ணொளி தனிற்பல வண்ணங்கள் தெரிந்திடும் (சுதந்)

## சரணங்கள்

அடிமை கொடுத்த இருள் அகன்றிடப் போகுது
ஆசைப்படி நடக்க வெளிச்சமும் ஆகுது
கொடுமை விலங்கினங்கள் குகைகளுக் கோடிடும்
கொஞ்சும் பறவைக்குலம் வானத்தில் பாடிடும் (சு)

ஒடுக்கும் தரித்திரத்தால் உடலும்குறுகின்று
உள்ளவர் முன்னிருந்து உளறும் எளியரைப்போல்
நடுக்கும் குளிர்ப் பயமும் நம்மை விட்டகன்றிடும்
நாட்டினில் இச்சைப்படி நம்குடித்தனம் செய்வோம்()

உரிமை சிறிதுமின்றி ஊரைப் பறித்து உண்டு
உழைப்பின்றிச் சுகித்திடும் ஊனரைப்போல் இருட்டில்
திரியும் திருடர்பயம் தீர்ந்திடும் நேரம் இனி
தீனரும் அச்சம் விட்டு ஆனசுகங்கள் பெறும் (சு)

# நல்ல சமயம்

பல்லவி

நல்ல சமயமடா—இதை—நழுவவிடுவாயோ!

அனுபல்லவி

நாட்டிற் சுதந்திரம் நாட்டிமனி தருள்
திட்டுந் தீண்டாமையுந் தீர்த்து விடுதற்கு (நல்ல)

சரணங்கள்

காந்தியைப்போல் தலைவர்—எந்தக்—காலத்திற் கிட்டுமடா
வாய்ந்த தருணமிதை—நீ—வழுவியி ழப்பாயோ
சூழ்ந்திடும் துன்பங்கள்—வீழ்ந்திட நாமினி
வாழ்ந்திடவும் மனச்—சாந்தியடைவும் (நல்ல)

வேதம் ஒலிக்குதடா—காந்தி—ஓதும்மொழிகளிலே
கீதை ஜொலிக்குதடா—அவர்—செய்யும் கிரியையெல்லாம்
வேற்றுமை யில்லாமல்—நாட்டின் நலத்தினைப்
போற்றின யாரையும்—கூட்டி உழைத்திட (நல்ல)

பண்டைய காலந்தொட்டு—நம்முள்—பாசம்பிடித்த பல
வண்டை வழக்கங்களை—இனி—வாரியெறிந்துவிட்டு
பக்தி வளர்த்தினிச்—சுத்த வழிகளில்
நத்தி அனைவரும்—ஒத்துச் சுகித்திட (நல்ல)

# உலகப் போக்கு

உலகப் போக்கைப் பாருங்கள்
ஊரைக் காக்கச் சேருங்கள்
கலகப் பேய் புகுந்திடும்
கவலையே மிகுந்திடும் (உலக)

அடிமை வாழ்வு விட்டு நாம்
ஆண்மை வாழ்வு கிட்டினோம்
கடமை யோடு எல்லையைக்
காக்க வேண்டும் அல்லவோ? (உலக)

நாடு முற்றும் நம்மது
நன்மை தீமை நம்மது
வீடு பெண்டு மக்களை
வேறு காக்கத் திக்கு யார்? (உலக)

படை எடுக்கும் யாரையும்
பயமுறுத்து வோரையும்
நடு நடுங்கச் செய்குவோம்
நாட்டை மீட்டு உய்குவோம் (உலக)

சாந்த வாழ்வை மிஞ்சிடோம்
சாவதற்கும் அஞ்சிடோம்
மாந்தருக்குள் பீதியை
மாற்ற வேண்டும் நீதியால் (உலக)

## தமிழன் இதயம்

சண்டையென்று அஞ்சினும்
சரணம் என்று கெஞ்சினும்
மண்டை உள்ள மட்டிலும்
மரணம் நம்மை விட்டதோ (உலக)

ஏழை என்ற போதினும்
என்ன துன்பம் மோதினும்
கோழை என்று வாழ்ந்திடோம்
கொடியருக்குத் தாழ்ந்திடோம் (உலக)

ஊர்கள் தோறும் கூடுவோம்
ஒற்றுமை கொண்டாடுவோம்
சீர் குலைக்க எண்ணுவோர்
சிந்தை நோகப் பண்ணுவோம் (உலக)

வீதிதோறும் காவலாய்
வீடு தோறும் ஏவலாய்
சாதி பேதம் தள்ளுவோம்
சமரசத்தைக் கொள்ளுவோம் (உலக)

அன்னியர்க் கிடங்கொடோம்
அரசை யார்க்கும் இனி விடோம்
மன்னராகி ஆளுவோம்
மாநிலத்தில் வாழுவோம். (உலக)

# சத்திய விரதம்

சத்திய விரதம் சாதிப்போம்
சமரச வாழ்க்கை போதிப்போம்
உத்தம சேவை இதுவாகும்
உலகத் துக்கே பொதுவாகும்

அன்பின் பெருமையை எடுத்துரைப்போம்
ஆயுதக் கொடுமையைத் தடுத்துரைப்போம்
துன்பம் யாவையும் சகித்திடுவோம்
தூய நன் நடைத்தைகள் வகித்திடுவோம்

பொய்யும் இம்சையும் வஞ்சனையும்
பூதலம் எங்கும் மிஞ்சினதால்
மெய்யும் கருணையும் தழைத்திடவே
வேண்டிய விதங்களில் உழைத்திடுவோம்

வீரம் என்பது கொலையல்ல
வெற்றியும் அதனால் நிலையல்ல
தீரம் என்பது திடசாந்தம்
தெரிவிப்பது நம் சித்தாந்தம்

ஜாதியும் மதங்களும் வீட்டோடு
சமத்துவம் யாவரும் நாட்டோடு
நீதியும் அறங்களும் உலகெங்கும்
நிலைத்திடத் தவம்புரி கிறசங்கம்

சாந்தியைப் படித்தது நம்நாடு
சத்தியம் கொடுத்தது நம்நாடு
காந்தியைத் தருவது நம்தேசம்
கடமை நமதே உபதேசம்

# ஒரு மருந்து

தெய்வத் தனம்மிக்க மானிட ஜென்மம்
தீமை வளர்த்துத் திகைப்பதும் என்னே!
கையிற் கடுங்கொலைக் கருவிகள் கொண்டு
கண்ணில் வெறிகொண்ட பார்வை மருண்டு
வெய்யிற் புழுவென்னத் துடி துடிப்போடும்
வேதனை பொங்கும் மனம்படும் பாடும்
வையத்தில் எங்கும் மனிதர்கள் யாரும்
வாழ்க்கையின் இன்பம் இழந்தனர் பாரும்

அன்பிற்கென் றேவந்த மனிதப் பிறப்பு
ஆறறி வுள்ளதென் பார்கள் சிறப்பு
துன்பத்துக் கேமுற்றும் அறிவைச் செலுத்தி
சுட்டு மடிக்கிறார் ஊரைக் கொளுத்தி
இன்பம் அடைந்தவர் யாரையும் காணோம்
ஏதுக்கு மக்களைக் கொல்லுவர் வீணே
என்பத்தை மாற்ற மருந்தென்ன வென்று
ஏங்குவர் யாரும் அறிஞர்கள் இன்று

கொஞ்சிக் குலாவுதல் மக்கள் மறந்தார்
கூடிப் பழகுதல் கூடக் குறைந்தார்
அஞ்சி நடுங்கி ஒதுங்குகின் றார்கள்
ஆகாயம் பார்த்துப் பதுங்குகின் றார்கள்

## தமிழன் இதயம்

வஞ்சனை யற்ற வலிமை யில்லாமல்
வானத்தில் வந்து எதிர்க்க நில்லாமல்
குஞ்சு குழந்தைகள் பெண்களைக் கொல்வார்
கோரத்தை வீரத்தின் போரென்று சொல்வார்!

வாளுக்கு வாளாம், வில்லுக்கு வில்லாம்,
வகைமிக்க ஆயுதம் தீர்ந்திடில் மல்லாம்!
ஆளுக்கு ஆள்நின்று நேருக்கு நேராம்
ஆண்மையும் ஆற்றலும் செய்வது போராம்
நாளுக்கு நாள் வந்து நள்ளிருள் தன்னில்
நரிபோலும் குறிதேடும் கள்ளர்கள் என்ன
பாலுக்கு வாய்வைக்கும் பாலரைக் கொல்வார்!
பாவத்தை நாகரீ கம்மெனச் சொல்வார்!

எந்திர வித்தைகள் வேணது கற்றோம்!
என்னென்ன மோபல புதுமைகள் பெற்றோம்!
சந்திரன் செவ்வாய் மண்டலத் தோடும்
சங்கதி பேச வழிகளைத் தேடும்
அந்தமில்லா பல சக்திகள் உற்றும்
அடிதடி சண்டையை விட்டிட மட்டும்
தந்திரம் ஒன்று படித்திலம் ஐயோ!
தரணியில் மக்கள் தவிப்பது பொய்யோ

இத்தனை தீமைக்கும் ஏற்ற மருந்து;
இந்திய ஞானிகள் கண்ட மருந்து;
உத்தமர் யாரும் உவக்கும் மருந்து,
உலகத்தில் துன்பம் ஒழிக்கும் மருந்து,
சத்தியம் சாந்தம் இரண்டு சரக்கை
சமனிடை அன்பெனும் தேனில் குழைத்து
பத்தியம் தெய்வ நினைப்போடு உண்டால்
பாருக்குள் பேருக்கும் போரிலை கண்டாய்

# சத்தியச் சங்கு

சத்தியம் நிலைக்குமென்று சங்கூதுவோம்
சாந்தமே ஜெயிக்குமென்று சங்கூதுவோம்
நித்தியம் கடவுளொன்று சங்கூதுவோம்
நீர்க்குமிழாம் வாழ்க்கையென்று சங்கூதுவோம்.

நீதியே நிலைக்குமென்று சங்கூதுவோம்
ஞாயமே செலிக்குமென்று சங்கூதுவோம்
வாதுசூது பொய்மையாவும் ஒன்றேடொன்றாய்
வம்புகொண்டு மறையுமென்று சங்கூதுவோம்.

புண்ணியம் பலிக்குமென்று சங்கூதுவோம்
பொறுமையே செலிக்குமென்று சங்கூதுவோம்
மண்ணிற் செய்த நன்மை தீமை யல்லாமலே
மற்றதொன்றும் மிச்சமில்லை என்றூதுவோம்.

தருமமே நிலைக்குமென்று சங்கூதுவோம்
தானமே தழைக்குமென்று சங்கூதுவோம
கருமமே சிறக்குமென்று சங்கூதுவோம்
கடவுளுண்மை வடிவமென்று சங்கூதுவோம்.

உண்மையைக் கடைப்பிடித் துயர்ந்தார்களை
உலகமோசம் என்னசெய்யும்? என்றூதுவோம்
தண்மையான சாந்திபெற்ற தக்கோர்முன்னே
சஞ்சலங்கள் ஓடுமென்று சங்கூதுவோம்.

## தமிழன் இதயம்

கோபமற்றுக் குணமிருந்த நல்லோர்முன்னால்
        கூர்மழுங்கும் ஆயுதங்கள் என்றாதுவோம்
பாபமற்ற வாழ்க்கையுள்ள பண்பாளரைப்
        பயமுறுத்த ஒன்றுமில்லை என்றாதுவோம்.

அன்புகொண்டு ஆசையற்ற நல்லார்களை
        அரசனும் வணங்குமென்று சங்கூதுவோம்
வம்புதுன்பம் வஞ்சமாயம் எல்லாமிதோ
        வழிகொடுத்து விலகுமென்று சங்கூதுவோம்.

கொல்லுகின்ற தில்லையென்ற நல்லோர்கள்பேர்
        குவலயத்தில் வாழுமென்று சங்கூதுவோம்!
வெல்லுகின்ற போதுமாசைவிட்டார்களை
        வீரர்தீரர் சூரரென்று சங்கூதுவோம்.

ஆன்மசக்தி கண்டுகொண்ட அன்பாளரை
        அடிமையாக்க யாருமில்லை என்றாதுவோம்
தான்மறந் தகந்தைவிட்ட தக்காரையே
        தலைவணங்கும் உலகமென்று சங்கூதுவோம்.

சாந்திசாந்தி சாந்தியென்று சங்கூதுவோம்
        சாத்திரங்கள் முடிவிதென்று சங்கூவோம்
காந்திகாந்தி காந்தியென்று நம்நாட்டிலே
        கால்நடக்கும் வேதமென்று சங்கூதுவோம்.

# காந்தீயமும் தமிழனும்

பரதேசி என்று வந்தோர் யாராலும்
பரிவோடு உபசரித்துப் பங்கும் தந்த
ஒருதேசம் உலகத்தில் இருக்குமானல்
உண்மை, அது தமிழ்நாடு ஒன்றேயாகும்.
வருதேச காலத்தின் வர்த்த மானம்
வகைவேறு காட்டுகின்ற வருத்த மொன்றும்
கருதாமல் நமது குணம் கலைந்திடாமல்
கருணையொன்றே பின்பற்றிக் கடமை செய்வோம்.

தமிழ் நாட்டின் சரித்திரத்தை மனதில் வைத்து
தாராளத் தமிழர்களின் தன்மை காத்து
அமிழ்தான தமிழ்மொழியில் அடங்கியுள்ள
அகிலத்தின் நல்லறிவு அனைத்துங் கண்டு
நமதாகும் மிகச்சிறந்த நாகரீகம்
நானிலத்துக் கிப்போது நன்மை காட்ட
எமதாகும் மிகப்பெரிய கடமையென்று
எண்ணியெண்ணித் தீர்மானம் பண்ணவேண்டும்.

பலபலவாம் தீர்மானம் படிக்க வேண்டாம்
பகட்டாகப் பேசிமட்டும் பயன் வராது
உலகினுக்கு வேண்டியது ஒன்றே ஒன்று
உத்தமனர் காந்திவழி உபதேசம் தான்

## தமிழன் இதயம்

கலகமின்றி மனிதரெல்லாம் கலந்து வாழக்
கருணைவழி காட்டஒரு கட்சி வேண்டும்
இலகுமிந்தத் திருப்பணியை உலகுக் காற்ற
இந்தியரே மிகமிகவும் ஏற்றமாவார்.

வானிருந்து ஒருதேவன் வலிய வந்து
வகைகெட்ட மனிதருக்கு வழியைக் காட்டி
தானிருந்து நமக்காகத் தவங்களாற்றித்
தருக்கான தூஷணைகள் பலவுந் தாங்கி
மோனநெறி தவறாத காந்தி யாக
முன்னிருந்து காரியங்கள் முயலும்போது
ஏனிருந்து நாம்பலவும் எண்ணவேண்டும்
என்னசொன்னார் காந்தியதைப் பண்ணுவோமே.

காந்தியர்க்குக் கைபோல உதவி நின்று
கடல் கடந்த ஆப்ரிக்கா கண்டந் தொட்டுச்
சேர்ந்திருந்து பாடுபட்டு ஜெயமும் பெற்ற
சிறப்பெல்லாம் தமிழருக்கே மிகவும் சேரும்
நேர்ந்திருக்கும் நெருக்கடியை வெல்ல இன்றும்
தமிழர் துணை காந்தியவர் நினைப்பார் உண்மை
சோர்ந்துவிடக் கூடாது தமிழா! காந்தி
சொன்னபடி செய்வதுதான் உந்தன் ஜோலி.

# தமிழ்நாடு எது? தமிழன் யார்?

வலைவீச ஆசைதரும் அலைவீசும்
வயலும்மற்ற வளங்க ளாலே
விலைவாசிக் கவலையின்றி விருந்தோம்ப
எதிர்பார்க்கும் விருப்பத்தாலே
'தலைவாசற் கதவினுக்குத் தாள் பூட்டே
இல்லாத தமிழ்நா டென்று
பலதேசம் சுற்றிவந்த மகஸ்தனிசும்
புகழ்ந்துரைத்த பழையநாடு.

பற்றொழித்த பெரியவரே பகுந்துரைக்கும்
அரசுமுறை பணிந்து போற்றி
கற்றறிந்த அரசர்களே காவல்செய்த
சரித்திரமே காணும் நாடு
மற்றெறிந்த வீரனென்று மமதையுள்ள
மன்னவரை மதிக்கா நாடு
சற்றொருவர் வருந்திடினும் தாம்வருந்தும்
அரசாண்ட தமிழர் நாடு.

வேங்கடமும் குமரியிடை விரிகடல்சூழ்
நிலப்பரப்பை வேறாய் ஆண்டு
வாங்குகிற வரிப்பணத்தின் வரையறுக்க
அரசுமுறை வகுத்த தல்லால்

## தமிழன் இதயம்

ஈங்குவட இமயம்வரை இந்தியரின்
நாகரீகம் ஒன்றே யாகும்
தாங்கள் ஒரு தனியென்று தடைபோட்டுத்
தருக்கினவர் தமிழர் அல்லர்.

விசைச்சொல்லும் உலகநடை வெவ்வேறு
நாடுகளில் விரியும் ஞானம்
பசைச்சொல்லும் பலபாஷை அறிவெல்லாம்
தமிழ்மொழியில் பலக்க வென்றே
திசைச்சொல்லுக் கென்றுதனி இடங்கொடுத்தார்
இலக்கணத்தில் தெரிந்த முன்னோர்
இசைச்சொல்ல இதைப்போல வேறுமொழிக்
கிலக்கண நூல் எங்கே காட்டு.

எந்தமொழி வந்திடினும் தமிழ்மொழியை
என்னசெய்யும் என்றே முன்னோர்
வந்தபிற மொழியையெல்லாம் வரவேற்றுத்
தமிழ்மொழியை வளரச்செய்தார்
செந்தமிழின் சரித்திரத்தைத் தெரியாமல்
மக்களுக்குத் திரித்துக் கூறி
இந்திமொழி வந்ததென்று இகழ்ந்துரைப்போர்
தமிழ்நாட்டின் பெருமை எண்ணார்.

பூச்சிபுழு உயிர்களையும் சமமென்று
போற்றினவர் தமிழ ராவார்
பேச்சிலுள்ள வேற்றுமைக்கு மனிதர்களைப்
பிரித்துவிடத் தமிழர் பேசார்
ஏச்சிலொரு இன்பமுள்ளார் எக்காலும்
தமிழர்களின் இனத்தைச் சேரார்
கூச்சலிட்டு வசையுரைப்போர் கொச்சைகளே
அதற்குநல்ல சாட்சி கூறும்.

## தமிழன் இதயம்

வேறெவரும் நுழையாமல் வேலியிட்டுத்
தமிழ்நாட்டார் வாழ்ந்த தில்லை.
கூறுபடும் பலநாட்டார் கூடித்தங்கிக்
குலவியதித் தமிழர் நாட்டில்
மாறுபடும் பலமதமும் மருவிமனம்
கலந்ததெங்கள் தமிழன் மாண்பு
தேறிமனம் தெளிவடைவோம் தமிழர்களின்
பெருங்குணத்தைத் தெய்வம் காக்கும்.

# தீண்டாமை ஒழிக

தீண்டாமை யென்கிற தீய வழக்கம்
தீரத் தொலைந்திட நாளாச்சு
ஆண்டவன் பொதுவென்று நம்பினயாரும்
அந்தப் பழியை அகற்றிட வாரும்.

இந்த வழக்கம் நாளுக்கு நாளாய்
இந்துமதத்தினை வெட்டுது வாளாய்
நிந்தை மிகுந்து அழிந்திடுமுன்னே
நீக்கிட யாரும் எழுந்திடும்இன்னே

வேதத்தி லில்லை சீதையில்இல்லை
வேறுள்ள சாத்திரம் யாருக்கினி?
சாதித்து யாரையும் சண்டாளனென்றிடும்
சாத்திரம் சத்தியச் சம்மதமோ?

நால்வ ருரைத்தவே வாரத்தி லில்லை
நந்தன் குலத்துக்கு நிந்தை சொலல்
பால்வரும் ஆழ்வார் பாசுரத் தில்லை
பாணர்வளர்ந்ததைக் கோணலெனல்.

சங்கரர் காசியில் அங்கென்ன சொன்னார்
சண்டாள பக்தனும் தம்குருவென்றார்
எங்கள் ராமானுஜர் தம்குலமென்றே
யாரையுங் கொண்டுடன் கோயிலுட்சென்றார்.

காட்டொரு வேடனைத் தம்பியென்றெய்தி
கழுகினைத் தந்தை யெனக்கடன் செய்து
சேட்டைக் குரங்கையும் தன்னுடன் சேர்த்துச்
சீதாபிராமனும் செய்ததைப் பார்த்து

கண்ணப்ப னெச்சிலை முக்கண்ண னுண்டார்
கண்ணபிரான் கடைநீரையுங் கொண்டார்
எண்ணிய பக்தருக் கெளியது தெய்வம்
என்பது வேறல்ல இந்துவின் தர்மம்.

# ஓட்டடா!

ஓட்டடா! ஓட்டடா!—நாட்டைவிட்டு ஓட்டடா!
தீட்டடா மனிதருக்குள்—தீண்டலென்ற தீமையை

தொத்து நோய்கள் மெத்தவும்
தொடர்ந்து விட்ட பேரையும்
தொட்டுக் கிட்டிச் சொஸ்தமாக்கல்
தர்ம மென்று சொல்லுவார்
சுத்தமேனும் ஜாதியால்
தொடப் படாது என்றிடில்
தொத்து நோயைக் காட்டிலும்
கொடியரென்று சொல்வதோ.

நாய் குரங்கு பூனையை
நத்தி முத்த மிடுகிறோம்
நரக லுண்ணும் பன்றியும்
நம்மைத் தீண்ட ஒப்புவோம்
ஆயும் ஆறு அறிவுடை
ஆன்ம ஞான மனிதனை
அருகிலே வரப்பொ றாமை
அறிவிலே பொருந்துமோ?

செடிமரங்கள் கொடிகளும்
ஜீவரென்ற உண்மையை
ஜெகமறிந்து கொள்ளு முன்பு
செய்த திந்த நாடடா!

## தமிழன் இதயம்

முடிவறிந்த உண்மை ஞானம்
முற்றி நின்ற நாட்டிலே
மூடரும் சிரிக்க மிக்க
முறையிலா வழக்கமேன்?

உயிரிருக்கும் புழுவையும்
ஈசனுக்கு உறையுளாய்
உணருகின்ற உண்மை ஞானம்
உலகினுக் குரைத்த நாம்
உயருகின்ற ஜீவருக்குள்
நம்மொடொத்த மனிதனை
ஒத்திப்போகச் சொல்லுகின்ற
தொத்துக் கொள்ள லாகுமோ?

அமல ஞகி அங்குமிங்கும்
எங்குமான கடவுளை
ஆலயத்துள் தெய்வமென்று
அங்கிருந்து எண்ணுவோம்;
விமலஞன கடவுள் சக்தி
மனிதன் கிட்டி விலகிஞல்
வேறுஜீவர் யாவும் அந்த
விமலனென்ப தெப்படி?

ஞாயமல்ல ஞாயமல்ல
ஞாயமல்ல கொஞ்சமும்
நாடுகின்ற பேர்களை
நாமிடைத் தடுப்பது
பாயுமந்த ஆற்றிலே
பருகிவெப்பம் ஆறிடும்
பறவையோடு மிருகமிந்தப்
பாரிலார் தடுக்கிறுர்?

# நானே சண்டாளன் !

## சண்டாளன் என்று விலக்கப்பட்டவனின் கேள்வி

நானே சண்டாளன்!—சரி
தானே உங்களுக்கு?

### சரணங்கள்

தாயை யிகழ்ந்தவன் சண்டாளன்
தந்தையை நொந்தவன் சண்டாளன்
தூயவர் நல்லோர் பெரியோரைத்
தோஷ முரைத்தவன் சண்டாளன்
தீயவை செய்தே பலர் ஏசத்
தின்றுழல் கின்றவன் சண்டாளன்
ஏவின செய்வேன் குற்றமிலேன்
எளியவ னானேன் என்பதற்கே (நானே)

வீட்டை மறந்தவன் சண்டாளன்
வேசியர்க் கலைபவன் சண்டாளன்
நாட்டைக் காட்டிக் கொடுத்ததனால்
லாப மடைந்தவன் சண்டாளன்
பாட்டைத் தனிவழி வந்தோரைப்
பதுங்கி யடிப்பவன் சண்டாளன்
ஓட்டைக் குடிசையில் வாழ்கின்றேன்
ஒரு சிறு பாபமும் அறியாத (நானே)

நன்றி மறந்தவன் சண்டாளன்
நயமுரை வஞ்சகன் சண்டாளன்
கொன்று சுகித்தவன் சண்டாளன்
கோப மிகுந்தவன் சண்டாளன்
கன்று நலிந்திடப் பாலெல்லாம்
கறந்து புசித்தவன் சண்டாளன்
ஒன்றுந் தெரியேன் "ஏழை" என்றிடும்
ஒன்றே என்குறை அதற்காக (நானோ)

கள்ளைக் குடிப்பவன் சண்டாளன்
காமத் தலைபவன் சண்டாளன்
கொள்ளை அடிப்பவன் சண்டாளன்
கூடிக்கெடுப்பவன் சண்டாளன்
'அள்ளித்தெரிக்கா'ப் பணக்காரன்
ஆபத் துதவான் சண்டாளன்
வெள்ளைத் துணியொன் றில்லாமல்
வேலை செய்வேன் அதற்காக (நானோ)

தெய்வ மிகழ்ந்தவன் சண்டாளன்
தீனரைக் கெடுத்தவன் சண்டாளன்
பொய்யுரை பேசிப் பிறர்கேடே
புரிந்து பிழைப்பவன் சண்டாளன்
'ஐய அடைக்கலம்' என்றோரை
ஆதரிக் காதவன் சண்டாளன்
வெய்யில் மழை யென்றில்லாமல்
வேண்டிய செய்வேன் அதற்காக (நானோ)

ஆலயத் துள்ளே அபசாரம்
அறிந்தே புரிந்தவன் சண்டாளன்
கூலியை மறைத்தவன் சண்டாளன்
கோள்சொல்லிப் பிழைப்பவன் சண்டாளன்

## தமிழன் இதயம்

வேலியைக் கடந்தே பிறன்பயிரை
வேண்டுமென் றழித்தவன் சண்டாளன்
காலையும் மாலையும் இல்லாமல்
கஷ்டப் படுவேன் கள்ளமிலேன் (நானோ)

வட்டி பெருக்கி ஏழைகளின்
வாழ்வு கெடுத்தவன் சண்டாளன்
பட்டினி எளியவர் ஆசையுடன்
பார்த்திட உண்பவன் சண்டாளன்
ஒட்டிய வழக்கில் பணத்திற்காய்
ஓரஞ் சொன்னவன் சண்டாளன்
அட்டியில்லாமல் சொன்னதெல்லாம்
அடியேன் கேட்டேன் அதற்காக (நானோ)

தானங் கொடுப்பதைத் தடுப்போனும்
தவத்தைப் பழிப்பவன் சண்டாளன்
மானங் கெடுத்தவர் சோறுண்டு
வயிறு வளர்ப்பவன் சண்டாளன்
காலுங் கரமும் உங்களுக்காய்க்
கல்லிலும் முள்ளிலும் பாடு படும்
ஏனிங் கென்னைச் 'சண்டாளன்'
என்பது? சரியோ உங்களுக்கே (நானோ)

# தமிழன் பாட்டு

பல்லவி

தமிழனென்று சொல்லடா
தலைநிமிர்ந்து நில்லடா (தமிழ)

சரணங்கள்

அமுதமூறும் அன்புகொண்டு
அரசு செய்த நாட்டிலே
அடிமையென்று பிறர் நகைக்க
முடிவணங்கி நிற்பதோ!
இமயம் தொட்டுக் குமரி மட்டும்
இசை பரந்த மக்கள் நாம்
இனியும் அந்தப் பெருமைகொள்ள
ஏற்றயாவும் செய்குவோம் (தமிழ)

குஞ்சைக் காக்கும் கோழிபோலக்
குடியைக்காத்த மன்னர்கள்
கோல்நடத்த அச்சமின்றி
மேல்நினைப்புக் கொண்டுநாம்
பஞ்சபூத தத்துவங்கள்
பக்தியோடு முக்தியைப்
பார் சிறக்கச் சொன்னநாமும்
சீர்குறைந்து போவதோ. (தமிழ)

## தமிழன் இதயம்

உலகிலெங்கும் இணையிலாத
உண்மைபாடும் புலவர்கள்
உணர்ச்சி தன்னை வானைத்தாண்டி
உயரச் செய்யும் நாவலர்
கலகமற்றுக் களிசிறக்கக்
கவிதை சொன்ன நாட்டிலே
கைகுவித்துப் பொய்கள் பாடிக்
காலந்தள்ளல் ஆகுமோ. (தமிழ)

கங்கையோடு பெருமை கொண்ட
காவிரிப்பொன்னாட்டிலே
கவலையின்றிச் சோறிருக்கக்
கலைகளெண்ணி வாழ்ந்தநாம்
மங்கி மங்கி வறுமை மிஞ்ச
மதிமயங்கி மாய்வதோ!
மாநிலத்தில் சோற்றுப் பஞ்சம்
மறையுமாறு மாற்றுவோம். (தமிழ)

சித்திரத்தில் மிக உயர்ந்த
சிற்பநூலின் அற்புதம்
சின்னச்சின்ன ஊரிற்கூட
இன்னுமெங்கும் காணலாம்
கைத்திறத்தில் ஈடிலாத
கல்விதந்த தமிழர்நாம்
கைநெறித்து வேலையின்றிக்
கண்கலங்கி நிற்பதேன்? (தமிழ)

எண்ணமற்று விசனமற்று
எங்கும் செல்வம் பொங்கவே
எந்தநாளும் ஆடல்பாடல்
எழிலரங்கம் ஓவியம்

## தமிழன் இதயம்

பண்ணமைந்த குழலும் யாழும்
        பக்கமேளம் யாவையும்
பாருக்கீந்து மகிழ்ச்சியின்றி
        நாமிருத்தல் பான்மையோ! (தமிழ)

விண்மறைக்கும் கோபுரங்கள்
        வினைமறக்கும் கோயில்கள்
வேறு எந்த நாட்டிலுண்டு
        வேலையின் விசித்திரம்
கண்ணிறைந்த சாவனங்கள்
        கனிகள் மிக்க சோலைகள்
கண்டபோது பண்டையெங்கள்
        நாகரீகம் காட்டுமே. (தமிழ)

மனிதவாழ்வில் இன்பமென்று
        சொல்லுகின்ற யாவையும்
மற்றவாழ்வில் உதவுமென்று
        நம்புகின்ற ஞானமும்
தனிமையான முறையில் யார்க்கும்
        தந்ததிந்தத் தமிழகம்
தட்டிடாது தெய்வமின்னும்
        கிட்டிநம்மைக் காக்குமே. (தமிழ)

# இளந் தமிழருக்கு

இளந்தமிழா! உன்னைக்காண
இன்பமிக்கப் பெருகுதா
இதுவரைக்கும் எனக்கிருந்த
துன்பம் சற்றுக்குறையுது
வளந்திகழும் வடிவினோடு
வலிமை பேசி வந்தனை
வறுமைமிக்க அடிமைநீக்க
வந்த ஊக்கம் கண்டு நான்
தளர்ந்திருந்த சோகம் விட்டுத்
தைரியங்கொண் டேனடா
தமிழர் நாட்டின் மேன்மைமீளத்
தக்ககாலம் வந்ததோ!
குளிர்ந்த எந்தன் உள்ளம்போல
குறைவிலாது நின்று நீ
குற்றமற்ற சேவை செய்து
கொற்றமோங்கி வாழ்குவாய்.

பண்டிருந்தார் சேரசோழ
பாண்டி மன்னர் நினைவெலாம்
பாயுதடா உன்னையின்று
பார்க்கும்போது நெஞ்சினில்
கொண்டகொள்கை அறம்விடாமல்
உயிர்கொடுத்த வீரர்கள்
கோடிகோடி தமிழர்வாழ்ந்த
கதைகள் வந்து குத்துது

## தமிழன் இதயம்

மண்டலத்தே இணையிலாத
வாழ்வுகண்ட தமிழகம்
மகிமைகெட்டு அடிமைப்பட்டு
மதிமயங்கி நிற்பதேன்?
செண்டெழுந்தா லென்னப்பாய்ந்து
தேசமுற்றும் சுற்றி நீ
தீரவீரம் நம்முள் மீளச்
சேருமாறு சேவைசெய்

அன்பினோடு அறிவுசேர்ந்த
ஆண்மைவேண்டும் நாட்டிலே
அச்சமற்ற தூயவாழ்வின்
ஆற்றல்வேண்டும் வீட்டிலே
இன்பமான வார்த்தைபேசி
ஏழைமக்கள் யாவரும்
எம்முடன் பிறந்தபேர்கள்
என்ற எண்ணம் வேண்டுமே
துன்பமான கோடிகோடி
சூழ்ந்துவிட்ட போதிலும்
சோறு தின்ன மானம் விற்கும்
துச்சவாழ்வு தொட்டிடோம்
என்பதான நீதியாவும்
இந்தநாட்டில் எங்கணும்
இளந்தமிழா! என்றும் நின்று
ஏடெடுத்துப் பாடுவாய்.



15

## தமிழன் இதயம்

பணமிருந்தார் என்பதற்காய்
பணிந்திடாத மேன்மையும்
பயமுறுத்தல் என்பதற்கே
பயந்திடாத பான்மையும்
குணமிருந்தார் யாவரேனும்
போற்றுகின்ற கொள்கையும்
குற்றமுள்ளார் யாரென்றாலும்
இடித்துக்கூறும் தீரமும்
இனமிருந்தார் ஏழையென்று
கைவிடாத ஏற்றமும்
இழிகுலத்தார் என்றுசொல்லி
இகழ்ந்திடாமல் எவரையும்
மணமிருக்கே இனிமைமண்டும்
தமிழ்மொழியால் ஓதிநீ
மாநிலத்தில் எவருங்கண்டு
மகிழுமாறு சேவைசெய்.

ஓடிஓடி நாட்டிலெங்கும்
உண்மையைப் பரப்புவாய்
ஊனமான அடிமைவாழ்வை
உதறித்தள்ள ஓதுவாய்
வாடிவாடி அறம்மறந்து
வறுமைப்பட்ட தமிழரை
வாய்மையோடு தூய்மைகாட்டும்
வலிமைக்கொள்ளச் செய்குவாய்

## தமிழன் இதயம்

கூடிக்கூடிக் கதைகள் பேசிச்
செய்கையற்ற யாரையும்
குப்பையோடு தள்ளிவிட்டுக்
கொள்கையோடு நின்று நீ
பாடிப் பாடித் தமிழின் ஓசை
உலகமெங்கும் பரவவே
பார்த்த யாரும் வார்த்தைகேட்டுப்
பணியுமாறு சேவைசெய்.

தமிழனென்ற பெருமையோடு
தலைநிமிர்ந்து நில்லடா
தரணியெங்கும் இணையிலா உன்
சரிதைகொண்டு செல்லடா
அமிழ்தமென்ற தமிழினோசை
அண்ட முட்ட உலகெலாம்
அகிலதேச மக்களுங்கண்
டாசைகொள்ளச் செய்துமேல்
கமழ்மணத்தின் தமிழில்மற்ற
நாட்டிலுள்ள கலையெலாம்
கட்டிவந்து தமிழர்வீட்டில்
கதவிடித்துக் கொட்டியே
நமது சொந்தம் இந்தநாடு
நானிலத்தில் மீளவும்
நல்ல வாழ்வு கொள்ளச் சேவை
செய்துவாழ்க நீண்டநாள்.

# தமிழரின் பெருமை

தமிழா! உனக்கிது தருணம் வாய்த்தது
தரணிக்கெல்லாம் வழிகாட்ட
'அமுதாம் என்மொழி அறமே என்வழி
அன்பே உயிரின்' என்று சொல்லும் (தமிழா!)

சைவமும் வைணவம் சமணமும் பவுத்தமும்
தழைத்தது செழித்தது தமிழ்நாட்டில்
வையகம் முழுவதும் வணங்கிடும் குணங்களை
வாழ்ந்தவர் உன்னுடை முன்னோர்கள். (தமிழா!)

எங்கோ பிறந்தவர் புத்தர் பெருமைகளை
ஏத்திப் பணிந்தவர்கள் தமிழ்நாட்டார்
இங்கே அங்கே என்று அறிவுகளை
என்றும் பிரித்ததில்லை தமிழ்நாட்டார். (தமிழா!)

ஏசு தமிழரல்ல என்றிடும் காரணத்தால்
இகழ்ந்து விடுவதில்லை தமிழ்நாட்டார்
பேசும் தமிழர்களில் கிறிஸ்துவைப் போற்றுகின்ற
பெருமையுடையவர்கள் பலபேர்கள். (தமிழா!)

மகம்மது பிறந்தது மற்றொரு தேசம் அவர்
மகிமை விளங்குமிந்தத் தமிழ்நாட்டில்
அகம்மகிழ்ந் தனுதினம் நாகூர் ஆண்டவனை
ஆரார் தொழுகிறார் அறியாயோ. (தமிழா!)

உலகின் மதங்களெல்லாம் ஒவ்வொரு காலத்திலே
ஓடிப்புகுந்ததிந்தத் தமிழ் நாட்டில்
கலகம் சிறிதுமின்றிக் கட்டியணைத் தவற்றைக்
காத்து வளர்த்தவர்கள் தமிழ் நாட்டார். (தமிழா!)

தன்னுயிர் நீப்பினும் பிறர்கொலை அஞ்சிடும்
தருமம் வளர்த்தவர்கள் தமிழ்நாட்டார்
மன்னுயிர் யாவையும் தன்னுயிர் என்றிடல்
மண்டிக் கிடப்பதுந்தன் தமிழ்மொழியே. (தமிழா!)

கொல்லாவிரதமே நல்லார் வழியென்று
கூறி நடந்ததுந்தன் குலத்துமுன்னோர்
எல்லா விதத்திலும் எவரும் மதிக்கத்தகும்
ஏற்றமுடையதுந்தன் இல்லறமாம் (தமிழா!)

உலகம் முழுவதிலும் கலகம் உறுமுதுபார்
உன்பெருங் கடமைகள் பலவுண்டு
விலகும்படிக்குச் செய்யும் வெறிகொண்ட பேச்சையெல்லாம்
விலக்க விழித்தெழுவாய் தமிழ்மகனே! (தமிழா!)

இந்தியத் தாயின்மனம் நொந்து கிடக்கையிலே
இனமுறை பேசுகின்றார்! இழிவாகும்
அந்தப் பெரியவளின் அடிமை விலங்கறுத்துன்
அன்பை நிலை நிறுத்து அகிலமெல்லாம். (தமிழா!)

தமிழகம் வாழ்கநல் தமிழ்மொழி வளர்கதெம்மைத்
தாங்கிடும் இந்தியத்தாய் தவம்பலிக்க
குமிழும் நுரையுமெனக் கூடி மனிதரெல்லாம்
கொஞ்சிக் குலவிடுவோம் குவலயத்தில். (தமிழா!)

## சாந்தி தரும் கொடி

கற்புடைப் பெண்கட் கெல்லாம்
கணவனே தெய்வ மென்பார்
சொற்பொருள் அறிந்தோர்க் கெல்லாம்
சொன்னசொல் தெய்வமென்பார்
மற்பெரும் வீரர்க் கெல்லாம்
மானமே தெய்வமாகும்
நற்பெயர் நாட்டிற் காக்கும்
நமக்கிந்தக் கொடியே தெய்வம்.

அன்னியக் கொடிகளெல்லாம்
அரசியல் ஒன்றே பேசி
பொன்னியல் போக வாழ்வின்
பொதுநலம் தன்னையேகோரும்
என்னுடைப் பரத நாட்டின்
இக்கொடி இந்தவாழ்வின்
பின்னையும் அறிவு தேடும்
பேரின்பம் தனையும் பேசும்.

பிறநாட்டுக் கொடிகளெல்லாம்
பிறநாட்டைப் பிடிக்க எண்ணி
மறம்நாட்டி மக்கள் தம்மைச்
சண்டையில் மடியச் செய்யும்,

## தமிழன் இதயம்

அறம்காட்டி உலகையாண்ட
அரியநம் கொடியோ மூன்று
நிறம் காட்டி நிலையாயுள்ள
நீதியே ஓத நிற்கும்.

பச்சையாம் நிறத்தினாலே
பசுமையாம் அன்பை யூட்டும்
நிச்சயம் வெள்ளை அந்த
நிமலமாம் உண்மை நீட்டும்
துச்சமிவ் வுலகமென்னும்
துறவினைக் காவி சொல்லும்
அச்சமில் குடிசைக் கூலி
அதிலொரு ராட்டைக் காட்டும்

தருமமே குறியாக் கொண்டு
தனக்கென்று எதையும் வேண்டாக்
கருமமே கடனென் றோதிக்
கருணையின் வழியே காட்டி
வருமமும் வஞ்சம் நீக்கும்
வாழ்க்கையை வகுத்துப் பேசும்
பெருமை நம் கொடியைப் போலப்
பிறிதொரு கொடியும் உண்டோ!

இந்திய மகனே! இந்த
இணையிலாக் கொடியைக் காத்தல்
முந்தியுன் முன்னோர் தந்த
அறமெலாம் முடிப்ப தாகும்
எந்தஓர் நாட்டிற் கேனும்
எதிரியாய் எடுத்த தல்ல
சந்ததம் உலகுக் கெல்லாம்
சாந்தியைத் தரவே யாகும்.

# கொடி பறக்குது

## பல்லவி

கொடிபறக்குது கொடிபறக்குது
கொடி பறக்குது பாரடா
கோணலற்ற கோலில் எங்கள்
கொடிபறக்குது பாரடா. (கொடி)

## சரணங்கள்

சிறைகடந்து துயரடைந்த
தேச பக்தர் நட்டது
தீரவீர சூரரான
தெய்வபக்தர் தொட்டது
முறைகடந்து துன்பம்வந்து
மூண்டுவிட்ட போதிலும்
முன்னிருந்து பின்னிடாமல்
காக்கவேண்டும் நாமிதை (கொடி)

வீடிழந்து நாடலைந்து
வினையிழந்த நாளிலும்
விட்டிடாத தேசபக்தர்
கட்டிநின்று காத்தது
மாடிழந்து கன்றிழந்து
மனையிழக்க நேரினும்
மானமாக நாமுமிந்தக்
கொடியைக்காக்க வேண்டுமே. (கொடி)

## தமிழன் இதயம்

உடலுழைத்துப் பொருள்கொடுத்து
உயிருந்தந்த உத்தமர்
உண்மையான தேசபக்தர்
ஊன்றிவைத்த கொடி இது
கடல்கொதித்த தென்னமிக்கக்
கஷ்டம் வந்த போதிலும்
கட்டிநின்று விட்டிடாமல்
காக்கவேண்டும் நாமிதை. (கொடி)

மனமுவந்து உயிர்கொடுத்த
மானமுள்ள வீரர்கள்
மட்டிலாத துன்பமுற்று
நட்டுவைத்த கொடியிது
தனமிழந்து கனமிழந்து
தாழ்ந்துபோக நேரினும்
தாயின்மானம் ஆனஇந்த
கொடியையென்றும் தாங்குவோம் (கொடி)

# கொடி வணக்கம்

கொடி வணக்கமது செய்வோம்—நாட்டின்
குறைகள் நீங்கியினி உய்வோம்
முடி வணங்கியதைப் போற்றி—அதன்
மூன்று நிறக்குறிகள் சாற்றி. (கொடி)

புதுமையான கொடி பாரீர்—வேறு
பூதலத்திலிலை தேரீர்
முதுமையா யெவர்க்கும் பொதுவாம்—வாழ்வின்
முறையைக் காட்டுவது இதுவாம். (கொடி)

பச்சையான ஒரு தோற்றம்—நமக்குப்
பக்தி வேண்டுமெனச் சாற்றும்
இச்சையான பொருள் கூடப்—பக்தி
இருக்க வேணுமதை நாட. (கொடி)

தூய்ய வெள்ளை நிறக் காட்சி—உண்மை
துலங்கு மென்பதற்குச் சாட்சி
மையமாக நிற்கும் மர்மம்—சத்யம்
மதங்கள் யாவினுக்கும் தர்மம். (கொடி)

துறவின் வர்ணமந்தக் காவி—உலகின்
துக்கப் பூட்டினுக்குச் சாவி
சிறையும் வீடுமதற் கொன்றே—என்னும்
சேதி ஓதுவதற் கென்றே. (கொடி)

நடுவில் ராட்டை யொன்று பார்ப்போம்—அதில்
நலிந்த பேர்க்குக் கஞ்சி வார்ப்போம்
வடுவிலாத தொழில் நூற்றல்—குடிசை
வாழும் ஏழைக்கென்று சாற்றல் (கொடி)

பக்தி, சத்தியம், தியாகம்—இவற்றின்
பண்பே வாழ்க்கையின் யூகம்
நித்தம் நித்தமிந்த நீதி—நம்மை
நீட்டும் இக்கொடியின் ஜோதி. (கொடி)

ஜாதிபேத மதில் இல்லை—மற்றும்
சமய பேதமதில் இல்லை
நீதி யானபல முறைகள்—நமக்கு
நிலைய மாகும் அதன் குறிகள். (கொடி)

என்ன புதுமையிது பாரும்—கொடி
எதிது போலொன்று கூறும்
அன்னைக் கொடியிதனைப் பாடி—அதன்
அடியில் நின்றுபுகழ் கூடி. (கொடி)

ஏழை எளியவர்கள் யார்க்கும்—பயம்
இல்லை யென்ன அறம் காக்கும்
வாழி நமதுகொடி வாழி—புது
வாழ்வு தந்தினிது ஊழி. (கொடி)

# வாழிய கொடியே!

பல்லவி

கொடியைக் கும்பிடுவோம்—நம்முடை நாட்டின்
கொடியைக் கும்பிடுவோம்.

சரணம்

எந்தக் கடவுளை எவர்தொழு தாலும்
எத்தனை வேற்றுமை நமக்கிருந்தாலும்
இந்தியர்க் கெல்லாம் பொதுவாம் தெய்வம்
இந்தக் கொடியே இதிலென்ன ஐயம். (கொடி)

சத்தியப் பாறையில் வேர்ஊன்றிய கொடி
சாந்தக் கோலின் உச்சியில் மணிமுடி
நித்திய மாகிய சுதந்தர வாழ்வினை
நித்தமும் நினைத்திட நின்றெமை ஆள்வது. (கொடி)

சமரசம் காட்டிடும் துகிலினை வீசி
சச்சர வாறிடத் தென்றலிற் பேசி
அமைதியும் அன்புடன் அனைவரும் பொதுவாம்
அரசியல் நடத்திட அறிகுறி இதுவாம். (கொடி)

காற்றோடு பெருமழை கலந்தடித்தாலும்
கடுத்தவர் இருந்திடில் படையெடுத்தாலும்
போற்றி இக்கொடியினை உயிரெனக் காப்போம்
பூதலம் வியந்திடும் புகழொடு பூப்போம். (கொடி)

ஏழையும் செல்வனும் எனதென தென்றே
எல்லோ ருந்தொழ நடுவில் நின்றே
வாழிய வையகம் வாழ்ந்திட வேண்டி
வாழிய கொடியே! வாழ்க பல்லாண்டும். (கொடி)

# குடிப்பதைத் தடுப்போம்

குடிப்பதைத் தடுப்பதே
கோடி கோடி புண்ணியம்
அடிப்பினும் பொறுத்து நாம்
அன்புகொண்டு வெல்லுவோம் (குடி)

மக்களை வதைத்திடும்
மனைவியை உதைத்திடும்
துக்கமான கள்ளினைத்
தொலைப்பதே துரைத்தனம் (குடி)

பித்தராகி ஏழைகள்
பேய்பிடித்த கோலமாய்
புத்திகெட்டுச் சக்தியற்றுப்
போனதிந்தக் கள்ளினால் (குடி)

பாடுபட்ட கூலியைப்
பறிக்குமிந்தக் கள்ளினை
வீடு விட்டு நாடு விட்டு
வெளியிலே விரட்டுவோம் (குடி)

கஞ்சியின்றி மனைவிமக்கள்
காத்திருக்க வீட்டிலே
வஞ்சமாகக் கூலிமுற்றும்
வழிபறிக்கும் கள்ளினை (குடி)

## தமிழன் இதயம்

மெய்தளர்ந்து மேனிகெட்டுப்
போனதிந்தக் கள்ளினால்
கைநடுக்கங் கால்நடுக்கங்
கண்டதிந்தக் கள்ளினால் (குடி)

தேசமெங்கும் தீமைகள்
மலிந்ததிந்தக் கள்ளினால்
நாசமுற்று நாட்டினர்
நலிந்ததிந்தக் கள்ளினால் (குடி)

குற்றமற்ற பேர்களும்
கொலைஞராவர் கள்ளினால்
கத்திகுத்துச் சண்டைவேணா
கள்ளினால் விளைந்ததே (குடி)

குற்றமென்று யாருமே
கூறுமிந்தக் கள்ளினை
விற்கவிட்டுத் தீமையை
விதைப்பதென்ன விந்தையே! (குடி)

# விட்டது சனியன்

விட்டது சனியன் விட்டது சனியன்
விட்டது நம்மை விட்டதடா
கொட்டுக முரசு கொம்பெடுத்தூது
கொடும் பாவி கள்ளைக் கொளுத்திவிட்டோம் (விட்டது)

செத்தது கள்பேய் இத்தினம் இதையினி
தீபாவளிபோல் கொண்டாடு
பத்திரம் கள்மேல் சித்தம் வாரா விதம்
பார்ப்பதும் காப்பதும் உன்பாரம் (விட்டது)

ஈச்வர வருஷம் புரட்டாசியிலே
இங்கிலீஷ் ஒன்று, பத்து முப்பத்தேழில்
சாச்வதம் போலவே நமைப் பிடித்தாட்டிய
சனியன் கள்கடை சாத்திவிட்டார் (விட்டது)

கூலியைத் தொலைப்பதும் தாலியை இழுப்பதும்
கூசிட ஏசிடப் பேசுவதும்
சாலையில் உருண்டொரு சவமெனக் கிடப்பதும்
சந்தி சரிப்பதும் இனியில்லை (விட்டது)

அழுதிடும் மக்களும் தொழுதிடும் மனைவியும்
ஐயோ! பசியுடன் காத்திருக்க
பொழுதுக்கும் உழைத்தது முழுவதும் கூலியைப்
போதையில் இழப்பதும் இனியில்லை (விட்டது)

பெற்ற தன் குழந்தைகள் சுற்றி நடு நடுங்க
பேயெனும் உருவொடு வாய்குளற
உற்றவர் உறவினர் காறி உமிழ்ந்திட
ஊரார் நகைப்பதும் ஒழிந்ததினி (விட்டது)

## தமிழன் இதயம்

விடிகிற வரையிலும் அடிதடி ரகளை
வீதியில் மாதர்கள் ரோதனமும்
குடிவெறி யால்வரும் கொடுமைகள் யாவையும்
கூண்டோ டொழிந்தது இனிமேலே (விட்டது)

எல்லா விதத்திலும் கள்ளால் வரும் பணம்
ஈனத்துக்கே இடமாகும்
நல்லார் சரியெனக் கொள்ளா வரியிதில்
நம்மர சடைந்திட்டபழி நீங்கும் (விட்டது)

போதையைத் தந்தபின் நீதியை ஓதுதல்
புத்தியுடைய ஓர் அரசாமோ
பேதைக ளாக்கிப்பின் பிழை புரிந்தாயெனல்
பேச்சுக்காகிலும் ஏச்சன்றோ (விட்டது)

காந்தியின் அருந்தவம் சாந்தமும் பலித்தது.
காங்கிரஸ் ஆட்சியும் ஓங்கிடுமே
போந்தது புது யுகம் தீர்ந்தது கலிபலம்
பூமிக்கே ஒரு புதுமையிது (விட்டது)

சக்கரவர்த்தி நாம் ராஜாஜீக்கொரு
சன்மானம் நாம் தந்திடுவோம்
அக்கரையோடவர் ஆணைப்படி கள்ளில்
ஆசை புகாவிதம் காத்திடுவோம் (விட்டது)

பாழும் கள்ளால் பட்டதை நினைத்தால்
பதைக்குது நெஞ்சம் கொதிக்குதடா
வாழும் நாடினி ஏழைகளிங்கில்லை
வானவர் வணங்கிட வாழ்ந்திடுவோம் (விட்டது)

# கேள்விகள்

பல்லவி

கத்தர் துணியுடுத்தச் சித்தமில்லா தநீ
கத்தியெடுத்தென் செய்குவாய்?

அநுபல்லவி

பித்தரைப்போலவே மெத்தப் பிதற்றுகின்றாய்
சற்றுநினைத்து உய்குவாய் (கத்)

சரணங்கள்

கள்ளுக்கடைகளிலே உள்ளம்மயங்கின நீ
கஷ்டங்கள் சகிப்பாயோ!
வெல்லும் சமர்களத்தில் கொல்லெனமுன்னின்று
வீரமும் வகிப்பாயோ! (கத்)

சாதிமதக்கலகப் பேதம்விடாதநீ
தைரியமடைவாயோ!
ஓதும்சமர்முனையில் ஏதும்கவலையின்றி
உயிரதை விடுவாயோ! (கத்)

சத்தியம்பேசவும் மெத்தப்பயந்திடும்நீ
சண்டையிற் செய்வதென்ன?
சுத்தமும் வீரனைப்போல் யுத்தமே பேசுகிறாய்
சூதனுமுய்வதுண்டோ! (கத்)

உஷ்ணஜலம்படவும் கஷ்டம்பொறாதவர்
உடன்கட்டை ஏறுவரோ!
இஷ்டமுனக்கிருந்தால் நஷ்டமில்லாவழி
இதைவிடக்கூறுகிறேன். (கத்)

# கதர்த் துணி வாங்கலையோ!

பல்லவி

கதர்த்துணி வாங்கலையோ அம்மா!
கதர்த்துணி வாங்கலையோ ஐயா! (கதர்)

சரணங்கள்

ஏழைகள் நூற்றது எளியவர் நெய்தது
கூழும் இல்லாதவர் குறைபல தீர்ப்பது (கதர்)

கன்னியர் நூற்றது களைத்தவர் நெய்தது
அன்னதானப் பலன் அணிபவர்க் களிப்பது (கதர்)

கூனர்கள் நெய்தது குருடர்கள் நூற்றது
மானமாய்ப் பிழைக்க மார்க்கம் தருவது (கதர்)

தாழ்ந்தவர் நூற்றது தளர்ந்தவர் நெய்தது
வாழ்ந்திடும் உங்கட்கினும் வாழ்த்துகள் சொல்வது (கதர்)

# தேசபக்தர் திருக்கூட்டம்

தேச பக்தர் திருக்கூட்டம்—தேச
சேவை செய்வதெங்கள் நாட்டம்
பாச பந்தமெல்லாம் ஓடி—விடப்
பாரதப் பெருமை பாடி (தேச)

பிச்சை யெடுக்க வந்ததல்ல—வேறு
பிழைக்க வழியிலை யென்றல்ல
இச்சை வந்து மிகத் தள்ள—தேசம்
இருக்கும் நிலைமைதனைச் சொல்ல (தேச)

தூங்கித் தூங்கி விழும் தமிழா!—உன்
தூக்கம் போக்க வந்தோம் தமிழா!
ஏங்கிப் படுத்திருக்கும் தமிழா!—உன்னை
எழுப்ப வந்தசக்தி தமிழா! (தேச)

எழுந்து நின்று கண்ணைத்துடைத்து—உன்
இருகையாலும் கொடிபிடித்து
அழுந்திக் கீழிருந்து வாடும்—அன்னை
அடிமை நீக்க வழிதேடும் (தேச)

வெட்டி வெட்டி யெறிந்தாலும்—மற்றும்
வேறுஹிம்சை புரிந்தாலும்
சுட்டி ரத்தம் சொரிந்தாலும்—நாங்கள்
தூய்மை மாறிடோம் நாளும் (தேச)

## தமிழன் இதயம்

சாந்த மூர்த்தியந்தக் காந்தி—சொன்ன
சத்தியத்தையே ஏந்தி
மாந்தர் யாருமினி உய்ய—உயர்
மார்க்க போதனைகள் செய்ய (தேச)

தேவிசக்தி துணை கொண்டு—இந்தத்
தேசம் சுற்றிவர வென்று
கூவிக்கூவி யெங்கள் தொண்டு—புரியக்
குறைகள் தீருமினி நன்று (தேச)

# ஆடு ராட்டே

பல்லவி

ஆடு ராட்டே சுழன் றாடுராட்டே

அனுபல்லவி

சுழன்று சுழன்று சுழன் றாடுராட்டே—இனிச்
சுயராஜ்யம் வந்ததென்று ஆடுராட்டே (ஆடு)

சரணங்கள்

பாபம்குறையுமென்று ஆடுராட்டே—இனிப்
பயங்கள் மறையுமென்று ஆடுராட்டே
கோபங் குறையுமென்று ஆடுராட்டே—நல்ல
குணங்கள் மிகுந்ததென்று (ஆடு)

மேலான ஜாதியென்று மிக்கப்பேசி—மிக
மாறான காரியங்கள் செய்து வாழும்
மாலான ஜனங்களின் வஞ்சனையெல்லாம்—இனி
மாண்டு மடியுமென்று ஆடு ராட்டே (ஆடு)

ஏழைகள் கண்ணீர்சொரிய மிக்கவருத்திப்—பல
எத்துக்கள் செய்தே பிழைக்கும் மனிதரெல்லாம்
வாழமுடி யாதினிமேல் வஞ்சனையினால்—அவர்
வாழ்க்கை திருந்து மென்று (ஆடு)

பட்டணத்து வீதிகளில் சுற்றியலைந்து—மிகப்
பாடுபடும் கிராமத்துப் பத்தினிப் பெண்கள்
இஷ்டமுடன் தங்குடிசை நிழலிருந்து—நூல்
இழைத்துப் பிழைப்பரென்று (ஆடு)

கள்ளுபீர் சாராயம் காமவகைகள்—கெட்ட
கஞ்சா அபின்களெல்லாம் ஓடியொளிக்க
பிள்ளைகுட்டிப் பெண்ஜாதி வயிறார—உண்ணப்
பெற்றதே சுதந்தரமென் (றாடு)

உழுது நெய்துபல தொழில்செய்து—பொருள்
உதவும் வாணிபமும் முயல்வதல்லால்
தொழுது பணிபுரியும் தொழில்களெல்லாம்
தோல்வியடையுமென்று (ஆடு)

வம்பளந்து வீண்பொழுது போக்கமாட்டார்—பெண்கள்
வாசலிலே கூட்டமிட்டுப் பேசமாட்டார்
துன்பமில்லை சோம்பியவர் தூங்கமாட்டார்—குடி
சுத்தப்படுமென்று சொல்லி (ஆடு)

ஜாதிஜனக் கட்டுகளை மதிக்காமல்—நித்தம்
தானடித்த மூப்பாக வாழ்ந்ததெல்லாம்
நீதிநெறி தெய்வவழி நினைத்தினிமேல்—சுகம்
நிரம்பத் திரும்புமென்று (ஆடு)

ஆங்கிலம்படித்தோமென் றகங்கரித்துச்—சொந்தம்
அக்கம்பக்கம் யாரெனினும் மதியாமல்
தாங்களே பெரியரென் றிருந்ததெல்லாம்—இனித்
தலைகுனிந்தோடுமென்று (ஆடு)

## தமிழன் இதயம்

சர்க்கார் மனிதரென்று மதிமயங்கி—குணம்
தக்காரெனினும் அவ மதித்தவர்கள்
சர்க்கார் ஜனங்களென்று மதிதெளிந்து—இனித்
தாழ உரைப்பரென்று (ஆடு)

படித்தம் படித்தமென்று பட்டங்காட்டி—ஏழைப்
பாமரரை ஏய்த்து வாழ்ந் தவர்களெல்லாம்
நடித்த நாடகங்கள் தவறென்பதைக்—கண்டு
நல்வழி நடப்பரென்று (ஆடு)

அன்னியர்கள் நூல்கொடுத்து ஆடைகொடுத்து—நம்
அங் த்தை மூடுகின்ற பங்கமொழியும்
கன்னியர்கள் நூற்கப்பல காளைகள் நெய்ய—நாம்
காத்துக்கொள்வோம் மானமென்று (ஆடு)

சாந்தி பெருகுமென்று ஆடுராட்டே—மனச்
சாட்சி விளங்குமென்று ஆடுராட்டே
காந்தி துலங்குமென்று ஆடுராட்டே—அந்தக்
காட்சி சுதந்தரமென் (ருடு)

ஆங்கார முள்ளடக்கி அன்புபெருக்கி—பல
ஆசைகளைச் சற்றேனும் அடக்கி வைக்க
ஓங்கார ரூபமதன் உண்மை காட்டி—இனி
ஓயாது நீ சுழன்று (ஆறி)

# கிளியும் வழியும்

ஆதிசுதந்தரத்தை கிளியே அடையவழிதேடு
நாதன் திருவடியை கிளியே நாடி ஜெயம்பாடு

இந்தப்பெரும் உலகில் கிளியே இச்சைப்படிபறக்க
சொந்தம் உனக்கிலையோ கிளியே சொல்லடி வாய்திறந்து

காட்டினிலே பிறந்தாய் கிளியே காற்றெனவே பறந்தாய்
கூட்டினிலே கிடக்க கிளியே கூசலையோ உனக்கு.

தங்கமணிக்கூண்டில் கிளியே தங்கியிருந்தாலும்
அங்கு சுதந்தரத்தின் கிளியே ஆனந்தமேதுனக்கு?

சொந்தமெலாம்மறந்து கிளியே சுற்றமெல்லாம் துறந்து
இந்தப்படியிருக்க கிளியே இச்சைகொண்டாயோ நீ!

பச்சைமரக்கிளைமேல் கிளியே பாடுதல் நீயிழந்தாய்
இச்சை உயிர்மேலே கிளியே இன்னும் எதற்காக?

ஓடியிரைதேடி கிளியே உண்பது நீ மறந்தாய்
நாடிப்பிறர்கொடுக்க கிளியே நாணமின்றிப் புசித்தாய்

காட்டுப்பழவகையை கிளியே காணுதல் நீ மறந்தாய்
போட்டதைஉண்டிருக்க கிளியே புந்திமகிழ்ந்தாயே

சொந்தமொழிமறந்தாய் கிளியே சொன்னது சொல்லு
இந்த விதம் வாழும் கிளியே இன்பமுனக்கேது? [கின்றாய்

உன்குலத்தைப்பழிக்க கிளியே உத்தரவானாலும்
அங்கது செய்துயிரை கிளியே ஆசையுடன் வகித்தாய்.

எண்ணமுனக்கிருந்தால் கிளியே எத்தனை நேரமடி
கண்ணைத் திறக்குமுன்னே கிளியே காட்சி சுதந்தரமாம்.

நல்லவழிசொல்லுவேன் கிளியே நாடித்தெரிந்துகொள்ளு
அல்லல்வழிவிடுத்து கிளியே அன்பின்வழிதேடு.

கூட்டை உடைத்துவர கிளியே கூடாதுன்னாலே
சேட்டைவழிகளை நீ கிளியே செய்திடும் ஜாதியல்ல.

சொன்னதைச் சொல்லாதே கிளியே சோறிட உண்ணாதே.
என்ன அழைத்தாலும் கிளியே ஏனென்று கேளாதே.

ரங்கரங்காவென்று கிளியே இங்கிதம் பேசாதே
எங்கேயெங்கேயென்று கிளியே ஏளனம் சொல்லாதே.

கொஞ்சிமகிழாதே கிளியே கெஞ்சிப்புகழாதே
அஞ்சிநடுங்காதே கிளியே ஆடிநடிக்காதே.

கொண்ட எஜமானன் கிளியே கோபித்துக்கொண்டாலும்
அண்டிஉயிர்வாழ கிளியே ஆகாதென்று சொல்வாய்.

கொல்லுவனென்றாலும் கிளியே கொஞ்சமும் அஞ்சாதே
மெல்லுவனென்றாலும் கிளியே மேனிநடுங்காதே.

வெட்டுவனென்றாலும் கிளியே வெற்றுரையென்றிருப்பாய்
சுட்டிடவந்தாலும் கிளியே சோதனையென்றிருப்பாய்.

சோதனைக் காலமடி கிளியே சோர்ந்திடுவாயோ நீ
வேதனையைப் பொறுத்தால் கிளியே வெற்றியுனதாகும்

இந்தப்படி கிடக்க கிளியே இயலாதென்பதனை
உந்தன் எஜமானன் கிளியே உணரும்படி நடப்பாய்.

இப்படி நீ நடந்தாற் கிளியே எண்ணியெண்ணிப்பார்த்து
ஒப்பி எஜமானன் கிளியே யோசனை செய்வாண்டி.

காரியமுன்னாலே கிளியே காசளவில்லையென்று
வீரியம்பேசாமல் கிளியே விட்டிடுவானுனையே.

கோதிச்சிறகுலர்த்தி கிளியே கூசாமல் விரித்து
நாதன் புகழ்பாடி கிளியே நாற்றிசையும் பறப்பாய்.

நீண்டபெருவானம் கிளியே நீயதிலேபறந்து
ஆண்டவன் சன்னிதியை கிளியே அண்டிச்சுகமடைவாய்.

# இந்தியத் தாயின் புலம்பல்

காலக்கதியடியோ கைவிரித்து நான் புலம்ப
ஆலம்விதையெனவே அளவிறந்த மக்கள் பெற்றும்
ஞாலத்தில் என்னைப்போல் நலிந்தாளொருத்தியுண்டோ?
நீலக்கடலுலகில் நீடித்தும் பிள்ளைகளால்
கோலமிழந்துநிலை குலைந்துருகி வாடுகின்றேன்.

மெத்தப்பகட்டுடையாள் மேற்கத்திப் பெண்ணொருத்தி
'அத்தை' யெனக்கூவி யெந்தன் ஆசாரவாசலிலே
தத்தித்தடுமாறித் தலைவணங்கி நின்றிருந்தாள்
"புத்தம்புதிய பெண்ணே போந்தகுறை என்னசொல்லு
சித்தங்கலங்காதே சின்னவளே" என்று சொன்னேன்.

வெள்ளைத்துகிலுடுத்து வெட்டிருந்தப் பட்டணிந்து
கள்ளக்குறி சிறிதும் காட்டா முகத்தினளாய்
அள்ளிச் சொருகிவிட்ட அழகான கூந்தலுடன்
பிள்ளை மொழிவதெனப் பின்னுகின்ற சொற்பேசி
மெள்ளத் தலைகுனிந்தே மெல்லியலாள் நின்றிருந்தாள்.

"எங்கிருந்து இங்குவந்தாய்! என்ன குறை பெண்மணியே?
சங்கிருந்த வெண்ணிறத்தாய்! சஞ்சலத்தால் வந்ததுண்
இங்கிருந்து, உள்ளதை நீஎன்னுடைய மக்களுடன் [டோ?
பங்கிருந்து கொள்வாய்நீ பயமொழிவாய்" என்றுசொல்லி
இங்கிதம்நான் சொன்னவுடன் இருதாளும்மண்டியிட்டு

குன்றி உரைகுழறிக் குளிரால் நடுங்கினள்போல்
சின்னஞ்சிறு குரலால் சிந்தைமிக நொந்தவளாய்
"உன்னுடனே பிறந்தோன் ஊரைவிட்ட ஆரியனும்
முன்னம் உனைப்பிரிந்து மேல்நாடு மேவினவன்
அன்னவன்புத்திரி நான் அத்தைநீர் சித்தம்" என்றாள்.

"நெஞ்சம்கலங்காதே நீயெதற்கும் அஞ்சாதே
தஞ்சமுனக்கிருப்பேன் தையலே மெய்யிதுகாண்
கொஞ்சும் இளவயதில் குறையுனக்கு வந்ததென்ன
பஞ்சை யெனத்தனியே பட்டணத்தை விட்டுவந்தாய்
வஞ்சியிளங்கொடியே வந்துபசியாறும்" என்றேன்.

சற்றுத்தலை நிமிர்ந்தாள் தையலவள் புன்சிரிப்பு
உற்றமுகத்தினோடு உள்ளம் குளிர்ந்தவள்போல்
சுற்றி அயல்பார்த்துச் சொன்னபடி என்னுடனே
முற்ற மதனைவிட்டு முன்கட்டில் வந்துநின்று
தத்தியதன்மேல் நடக்கத் தயங்கினவள் போல நின்றாள்.

"தாவில்லை உள்ளே நீ தாராளமாய் வரலாம்
வா"வென்று சொன்னவுடன் வல்லியவள் மெல்லவந்தாள்,
தூவெள்ளை யான அவள் துணியும், அணியிழந்தும்
தாவள்யமான அந்தத் தையலவள் மெய்யழகில்
'கோ' வென்று கூட்டமிட்டென் குழந்தைமார்கூடி
[விட்டார்.

ஆனபடி என்னுடனே அன்னமந்தக் கன்னிவர
மேனியவள் ஆடையெல்லாம் வாடையொன்றுவீசியது.
"ஏனிதிளங்கொடியே! என்ன?" வென்று கேட்டதற்கு
"மீனுணவும் ஊனுணவும் மெத்தஉண்டதத்தையரே
தேனுங்கனிகாய் என்தேசத்தில் கொஞ்சம்" என்றாள்.

சொல்லி முகஞ்சுளித்தாள் சோகமதை மாற்றி
கொல்லைச் சிறுவீட்டிற் கொண்டவளைச் சென்றிருத்தி
மல்லிகை முல்லைமலர் மணமிருந்த நன்னீரால்
அல்லிநிறத்தவளை அங்கமெலாம் நீராட்டி
மெல்லத் துவட்டிவிட்டு மெய்யழகு செய்துவைத்து
தக்க உடைகொடுத்து டக்காவின் சல்லாவால்
மிக்க விலையுயர்ந்த மிகமெலிந்த ஆடையினால்
ஒக்க அவளைமிக ஒய்யாரம் செய்துவிட்டு
பக்கம் உடனிருத்திப் பரிந்தேவிருந்துமிட்டேன்
துக்கம்மிக ஆறியவள் துதித்தாள் மிகவும் என்னை.
என்னுடைய மக்களுடன் என்வீட்டுத் தாதியரும்
இன்னும் பணியாட்கள் எல்லோரும் பக்தியுடன்
எள்ள சிறுகுறையும் ஏதுமவட் கில்லாமல்
சொன்னபடி எல்லோரும் சோடசஉபசாரம்
பண்ணியந்தப் பெண்மணியைப் பார்த்துவந்தார்
நேர்த்தியுடன்
அஞ்சி அடக்கமுடன் அத்தையென்று பக்தியுடன்
வஞ்சியிளங்கொடியாள் வாழ்ந்திருந்தாள் வீட்டில்
எந்தன்
குஞ்சுகுழந்தை யெல்லாம் கோதையவள் தன்னிடத்தில்
கொஞ்சி விளையாடிக் குலவிமகிழ்ந்திருந்தார்
நெஞ்சம் மிகக்களித்து நிம்மதியாய் நானிருந்தேன்.
இந்தவிதம் என்வீட்டில் என்னுடைய மக்களினும்
சொந்தம் மிகக்கொண்டாடிச் சொன்னபடி கேட்டுவந்து
வந்திருக்கும் நாளையிலே ஒருநாள் அருகில்வந்து
"எந்தனுடை ஊரின்மேல் ஏக்கமின்று வந்ததனால்
உந்தனுடை உத்தரவில் ஓலவிட ஆசை என்றாள்.

# தமிழன் இதயம்

"என்ன தடை இதற்கு எழுதுவா" யென்று சொன்னேன்
சொன்னவுடன் எந்தனுக்குத் தோன்றுதமொழிதனிலே
கன்னியவள் தன்னவர்க்குக் காகிதமும் போட்டுவிட்டாள்
பின்னைச் சிலநாளில் பெண்ணவளின் தன்னினத்தார்
அண்ணனென்றும் தம்பியென்றும் அக்கமென்றும்
பக்கமென்றும்.

வந்தார் பலபேர்கள் வந்தவரைச் சொந்தமுடன்
தந்தேனிடமவர்க்கும் தக்கவிருந்துமிட்டேன்
சந்தேகம் நானவர்மேல் சற்றும் நினைக்காமல்
அந்தோ இருந்துவிட்டேன் அந்த ஒரு காரணத்தால்
நொந்தேன் நிலைதவறி நோவேன் விதியினையே.

அன்னவர்கள் கொண்டுவந்த அழகான பலபொருள்கள்
மின்னுகின்ற கண்ணாடி மினுக்குகின்ற பொம்மைகளும்
இன்னும் மயக்குகின்ற என்னென்னவோ பொருள்கள்
என்னுடைய மக்களுக்கு எடுத்து கொடுத்தவளாய்க்
கன்னியவள் சிரிக்கக் களித்துவிட்டார் மக்களெல்லாம்.

நாளுக்கு நாள தன்மேல் நலிந்ததடி என்வீடு
மேலுக்கு மேலாக மிகவும் பயந்தவள்போல்
'பாலுக்குங் காவலொடு பூனைக்கும் தோழ'னென்றே
தோல்நிற்க உள்ளிருந்த சுளைமறைத்த கொள்கையென
கோல்செய்த என்வாழ்வைக் குலைத்துவிட்டாள்
மெல்லமெல்ல.

என்ன உரைத்தாளோ! ஏதுமருந்திட்டாளோ!
அன்னை தந்தை தெய்வமென்று ஆராதனை புரிந்த

## தமிழன் இதயம்

என்னுடைய மக்களென்னை ஏறெடுத்தும் பார்ப்பதில்லை
சொன்னபடி கேட்பதில்லைத் 'தூ' வென்றும் 'போ'
வென்றும்
கன்னியவள் மோகத்தால் காலால் எனை உதைப்பார்.

கொண்டசமயம் விட்டார் குலதெய்வப்பூசைவிட்டார்
பண்டைப் பெருமையுள்ள பக்திகளும் விட்டொழிந்தார்
கண்டபடி உண்டுடுத்துக் கண்டபடி யாய்க்களித்து
பெண்டொருத்தி தன்மயக்கில் பெற்ற என்னையும்இகழ்ந்து
சண்டையிட்டுத் திரிவார்நான் தவங்கிடந்த மக்க
ளெல்லாம்.

# காங்கிரஸ் பொன் விழா

## தம்மி

நேரல்ல கார்த்திகைத் தீபமல்ல—அந்தத்
தீபாவளியும் இன்றல்லவே
ஊரெல்லாம் என்ன வெளிச்சமென்பீர் இந்த
ஒப்பற்ற கொண்டாட்டம் ஏதுக்கென்பீர்.

காங்கிரஸ் என்றொரு சங்கமுண்டு—அது
காதிற்படாதவர் யாருமில்லை
ஈங்கதற் கைம்பது ஆண்டுகள் ஆனதில்
இந்திய மக்களின் கொண்டாட்டம்.

தங்கி இருக்க இடங்கொடுத் தோம்—அதைத்
தாங்கள் இடமெனச் செய்துகொண்டார்
இங்கிருந் தேயவர் மெல்ல மெல்ல இந்த
இந்திய நாட்டை அடிமைகொண்டார்.

அந்த அடிமைத் தனம்போக நம்
அன்னையும் ஆட்சியும் மீட்சிபெற
இந்தத் தினம்வரை இந்தியர் மானத்தை
ஏந்தி உழைப்பது காங்கிரசே.

கெஞ்சிக் கெஞ்சிப்பல நாள்கேட்டும்—அதைக்
கேட்பவர் யாரும் இல்லாததனால்
அஞ்சிக்கை யாவையும் விட்டொழிய நமக்
காண்மை கொடுத்தது காங்கிரசே.

சத்தியம் என்ற கொடிபிடித்து—உயர்
சாந்தத் தியாகப் படைதொடுத்து
உத்தமர் காந்தி உரைப்படி காங்கிரஸ்
உலகம் வியந்திடும் போர் நடத்தி.

அடிமைக் குணத்தை அழித்து விடுதலை
ஆனந்தத் தில்நமக் காசை தந்து
கொடுமை சகிக்கும் அன்பின் வலிமை
கொடுத்தது நம்முடைய காங்கிரசே.

ஒளியறியாத விழிபோலும்—ஓர்
ஓசைப்படாத செவிபோலும்
களியறி யாதநம் அடிமையை மாற்றிக்
களிப்புறச் செய்திடும் காங்கிரசே.

'காங்கிரஸ்' என்பது இந்திய நாட்டின்
கண்ணியம், கவசம் கேடயமாம்.
காங்கிரஸ் தன்னை இந்தியர் தம் இரு
கண்ணின் மணியெனக் காத்திடுவோம்.

பொன்முடி சூட்டி வணங்கிடுவோம்—இன்னும்
புத்துணர்வோடு பணிபுரிவோம்
நன்மைகள் யாவையும் காங்கிரசால் வரும்
நாடு செழித்திட நாம் வாழ்வோம்.

# கம்பன் விழா

செம்பொருளும் சொற்பெருக்கும் தெளிந்த ஞானம்
தேடுகின்ற இலக்கியமும் செறிந்ததாகும்
நம்பெரிய தமிழ்மொழிக்குப் பெருமை நாட்டி
நானிலத்தின் கவிஞருக்குள் தலைவன் என்று
அம்புவியின் பலமொழிகள் படித்தா ராய்ந்த
அறிஞர்களில் பெரும்பாலார் ஆமோ திக்கும்
கம்பனுடைத் திருநாளில் கலந்தோர்க் கெல்லாம்
கைகூப்பி வரவேற்போம் கடவுள் காக்கும்.

கரையறியாக் காட்டாற்று வெள்ளம் போலக்
கவிபொழிந்து வான்மீகி உலகுக் கீந்த
திரையறியா ஓட்டத்தைத் தேக்கிக் கட்டித்
திறமிகுந்த கால்வாய்கள் செய்து பாய்ச்சித்
தரையறியா இலக்கியக்கா வனத்தைத் தந்தான்
தனிப்புலமைக் கம்பனெனும் கவிதைத் தச்சன்
உரையறியாப் பயனளிக்க உதவும் பாட்டை
உலகமெலாம் அனுபவிக்க உழைப்போம் வாரீர்.

வனத்திலுள்ள மலர் வகைகள் எல்லாம் கொய்து
வாசனைவேர் பச்சிலைகள், பலவும் சேர்த்து
கனத்த ஒரு பூப்பொதியாம் ராமன் காதை
வான்மீகி யெனும் தவசி கட்டோ டந்தான்

## தமிழன் இதயம்

இனத்தையெலாம் ஆய்ந்தறிந்து இணைத்துக் கோத்து
இடைக் கிடந்த மாசுமரு யாவும் நீக்கி
தனித்தமணம் அறந்திகழும் மாலை யாக்கித்
தரணிக்கே சூட்டிவைத்தான் கம்பன் தானே.

மால்கடிந்த தவமுனிவான் மீகிளன்பான்
வனத்திடையே தான்கண்டு கொண்டு வந்த
பால்படிந்து, முள்ளடர்ந்து, பருத்து நீண்டு,
பரிமளிக்கும் பலவின்கனி பாருக் கீந்தான்
மேல்படிந்த பிசினகற்றி, மெள்ளக் கீறி
மெதுவாகச் சுளை எடுத்துத் தேனும் வார்த்து
நூல்படிந்த மனத்தவர்க்கு விருந்து வைத்தான்
கம்பனென்ற தமிழ்த்தாயார் நோற்ற மைந்தன்.

அன்னியர்கள் தமிழ்மொழியை அறிந்தோர் பார்த்து
அதிசயித்து ஆசைகொள்ளும் கவியாம்கம்பன்
தன்னையிந்தத் தமிழுலகம் மறக்க லாமோ
சரியாகப் போற்றாத தவறே போலும்
என்னவிதம் எங்கிருந்தான் என்றும் கூட
ஏற்பதற்காம் சரித்திரங்கள் ஏனோ காணோம்
இன்னமும்நாம் இப்படியே இருக்கலாமோ?
இழிவன்றோ தமிழரெனும் இனத்துக்கெல்லாம்.

நிதிபடைத்தோர் கலைவளர்க்கும் நெறியைக் காட்டி
நீங்காத புகழினுக்கோர் நிலைய மாகி
மதிபடைத்த புலமையுள்ளளோர் எவரும் வாழ்த்த
மங்காத பெருவாழ்வு தமிழுக் கீந்து

## தமிழன் இதயம்

நிதிபடைத்த ராமகதை தோன்றச் செய்த
சோழவள வெண்ணெய் நல்லூர்ச் சடையன் சேரும்
கதிபடைத்த சொல்வலவன் கம்பன் பேரும்
கடல்கடந்த நாடெல்லாம் பரவக் காண்போம்.

கம்பனுக்கோர் பெருநிலையம் காண வேண்டும்
கவிதைகளை ஆதரிக்கும் கழகம் வேண்டும்
தம்பழைய பெருமைகளை மறந்த மக்கள்
தலைநிமிர முடியாது தரணி தன்னில்
வம்பளந்து வீண்கதைகள் பேசிப் பேசி
வாழ்வின் எல்லாத் துறைகளிலும் வறிய ரானோம்
நம்பி மனத் தெளிவுடனே கடமை ஆற்றி
நமதுமொழிக் கலைவளர்த்து நன்றே வாழ்வோம்.

# கம்பன்

எண்ணி எண்ணித் திட்டம்போட் டெழுதி னானோ!
எண்ணாமல் எங்கிருந்தோ கொட்டினானோ!
ண்ணியத்தால் உடன்பிறந்த புலமை தானோ!
போந்த பின்பு ஆய்ந்தறிந்து புகன்ற தாமோ?
தண்ணியல்சேர் தமிழணங்கின் தவமே தானோ!
தயரதனும் சனகனுமே தரித்த நோன்போ
விண்ணமுதின் சுவைகெடுத்த கம்பன் பாடல்
விரிந்தவிசம் என்றென்றும் வியப்பே ஆகும்.

சாதிமத விலங்கினம் வாழ் காட்டை மாற்றி
சமனாக்கிச் சமரசமாம் தளத்தின் மேலே
நீதிநெறி கருணையெனும் நிலைகள் நாட்டி
நித்தியமாம் சத்தியத்தின் சிகரம் நீட்டிக்
காதல்அறம் வீரம்எனும் கொடியைத் தூக்கிக்
கம்பனென்பான் கட்டிவைத்த கனக மாடம்
ஆதிமுதற் பரம்பொருளின் சக்தி யாகும்
அன்னையெங்கள் தமிழ்த்தெய்வம் அமரும் கோயில்.

ஏழையென்றும் செல்வரென்றும் பேதம் எண்ணார்
எல்லாரும் எச்சுகமும் எளிதே பெற்றுக்
கோழையென்ற குடிசனங்கள் எவரும் இன்றிக்
கொடுங்கோலும் கடுங்காவல் இல்லா நாட்டில்

## தமிழன் இதயம்

வாழ்தற்கு வேண்டும் எல்லா வளமும் தாங்கி
வந்தபகை நொந்துவிழும் பொறிகள் வைத்து
ஆழியுடன் தமிழ்த்தாயார் அரசு காக்கும்
அற்புதமாம் கோட்டையன்றோ கம்பன் பாட்டு.

வேந்தருக்கும் குடிகளுக்கும் பொருத்தம் சொல்லி
வேற்றரசர் படையெடுக்கா வீரம் கூறி
தேர்ந்த பல கலையறிவின் இன்பம் தேக்கித்
தெய்வபக்தி நட்பிவற்றின் திறமும் சேர்த்துக்
காந்தனுக்கும் காதலிக்கும் கற்பைக் காட்டிக்
கட்டாயப் படுத்தாமல் கடமை பேசிச்
சாந்தமுள்ள சமுதாய அமைப்புக் காகும்
சாத்திரமாம் கம்பனென்பான் தந்த பாட்டு.

கம்பனென்ற பெரும்பெயரை நினைக்கும் போதே
கவிதையென்ற கன்னிகைதான் வருவாள் அங்கே
அம்புவியில் கண்டறியா அழகி னோடும்
அமரருக்கும் தெரியாத அன்பி னோடும்
இன்பமென்று சொல்லுகின்ற எல்லாம் ஏந்தி
இன்னிசையும் நன்னயமும் இணைத்துக் காட்டித்
துன்பமென்ற மனத்துயரைத் துடைத்து விட்டுத்
தூங்காமல் தூங்குகின்ற சுகத்தை ஊட்டும்.

# தமிழ் இசை

தன்னாட்டுத் தாய்மொழியில் எவரும் கேட்கத்
தமிழ்நாட்டில் தமிழ்ப் பாட்டு வேண்டு மென்ற
நன்னாட்டத் துடன்ராஜா நம் சர் அண்ணா
மலையவர்கள் அதற்காகப் பரிசு நாட்டத்
தென்னாட்டுச் சிதம்பரத்தில் அறிஞர் கூடித்
தமிழ்மொழிக்குத் தேவையென்று தீர்மா னித்தால்
எந்நாட்டு யாராரோ எங்கோ கூடி
ஏசுவதும் பேசுவதும் என்ன விந்தை!

வந்தஎந்தப் பிறமொழிக்கும் வரவு கூறி
வகைசெய்து வாழ்வளித்து வரிசை யெல்லாம்
தந்தவர்கள் தமிழரைப்போல் வேறு யாரும்
தாரணியில் இணைசொல்லத் தகுவாருண்டோ?
அந்தப் பெருங் குணத்திலின்னும் குறைவோமில்லை;
ஆனாலும் தமிழினங்கள் வாழ வேண்டின்
சொந்தமொழிக் கலைகளெல்லாம் சுருங்கித் தேயப்
பார்த்திருந்தும் சோம்புவது அறிவோ சொல்வீர்.

முக்கிமுக்கிப் பயின்றுபல முயற்சி செய்து
மூக்காலும் வாக்குரைத்து, மூச்சு வாங்கத்
திக்கமுக்க லாடுகின்ற பாஷைக் கெல்லாம்
சிறப்பாகும் சங்கீதத் திறமை யென்றும்

## தமிழன் இதயம்

சிக்குமுக்கு உச்சரிப்புச் சிறிதும வேண்டாச்
சீரிலகும் எழுத்தியல்பு சேர்ந்த தாகித்
தக்கமிக்கோர் இனிமையெனும் தமிழில் நாதச்
சங்கீதம் குறைவென்றால் தரிக்கலாமோ.

நாதமெனும் பிரமத்தைப் பணிவோம்; ஆனால்
நாமறியா மொழியில் நமக்கேது நாதம்?
கீதமென்று புரியாத பாட்டைக் கேட்டுக்
கிளர்ச்சிபெறு உணர்ச்சியிலே கீதம் ஏது?
வாதமென்ன? இதிலெவர்க்கும் வருத்தம் ஏனோ!
வாய்மணக்கப் பிறமொழியை வழங்கினாலும்
ஓதியதும் உணர்ந்ததுவும் தாய்ப்பா லோடு
ஊட்டியதாம் தாய்மொழிபோல் உதவாதொன்றும்.

கலையென்றால் உணர்ச்சிகளைக் கவரவேண்டும்,
களிப்பூட்டி அறிவினைப் போய்க் கவ்வவேண்டும்.
நிலைகொள்ளாச் சிந்தனையை நிற்கச் செய்து
நீதிநெறி தெய்வநினைப் பூட்டற் கன்றோ?
விலையில்லாப் பெருமைபல உடையதேனும்
விளங்காத பாஷையிலே பாட்டைக் கேட்டுத்
தலையெல்லாம் சுளுக்கேற அசைத்திட் டாலும்
தனக்கதுவோர் கலையின்பம் தருவ துண்டோ?

சங்கீதம் பாடுதற்கும் மொழிக்கும் என்ன
சம்பந்தம் என்றெவரும் சாதிப் பாரேல்,
இங்கேதும் தடையில்லை ஏற்றுக் கொள்வோம்:
எல்லாமே தமிழ்ப் பாட்டா யிருந்தாலென்ன?
சிங்கார வாதங்கள் பலவும் பேசிச்
சிறப்பான முயற்சியினைச் சிதைக்கலாமோ?
தங்காமல் தயங்காமல் தளர்ந்தி டாமல்
தமிழ்நாட்டார் இச்செயலைத் தாங்கவேண்டும்.

## தமிழன் இதயம்

கேட்டவர்கள் பாடினவர் எல்லாம் சேர்ந்து
 கெடுத்துவிட்ட காரியத்தைக் கிண்டிக் கிண்டி
நாட்டிலின்னும் இதற்குமொரு சண்டையின்றி
 நல்லதொரு தமிழ்ப்பண்ணை நடத்த வேண்டும்;
பாட்டினோ டிலக்கியமும் படியப் பாடிப்
 பருந்தோடு நிழல்செல்லும் பான்மை காப்போம்;
கூட்டமிட்டுப் பேசிவிட்டு மறந்திடாமல்
 குற்றமிதைத் தமிழ்நாட்டிற் குறைக்கவேண்டும்.

பலநாட்டுச் சங்கீதம் நமக்கு வேண்டும்,
 பற்பலவாம் முறைகளையும் பழக வேண்டும்,
விலைகூட்டிக் கலையறிவை வாங்கி யேனும்
 விதம்விதமாய்த் தமிழ்மொழியில்விரிக்க வேண்டும்
அலைநீட்டும் கடல் கடந்த அறிவானாலும்
 அத்தனையும் தமிழ்வழியில் ஆக்கவேண்டும்
நிலைநாட்டித் தமிழ்க்கலைகள் வளர்ச்சிக்கென்றே
 நிச்சயமாய் உழைக்கஒரு நிலையம் வேண்டும்

ஆதலால் தமிழ்நாட்டில் தமிழ்ப் பாட்டிற்கே.
 ஆதரவு அகத்தியமாய் அதிகம் வேண்டும்;
காதலால் தாய்மொழியைக் காப்பதன்றிக்
 கடுகளவும் பிறமொழிமேற் கடுப்ப தல்ல;
தீதிலா திம்முயற்சி சிறப்புற் றோங்கத்
 திருவருளைத் தினந்தினமும் தொழுது வாழ்த்தி
வாதெல்லாம் விலக்கிக் கலைவாண ரெல்லாம்
 வல்லநல்ல தமிழ்பாடி வாழவேண்டும்.

# திருமுடி சூட்டிடுவோம்

பல்லவி

திருமுடி சூட்டிடுவோம்—தெய்வத்தமிழ்மொழிக்கு (திரு)

அனுபல்லவி

வருமொழிஎவருக்கும் வாரிக்கொடுத்துதவி
வண்மைமிகுந்த தமிழ் உண்மை உலகறிய (திரு)

சரணங்கள்

பெற்றவளை இகழ்ந்து மற்றவரைத் தொழுத
பேதமை செய்துவிட்டோம் ஆதலினால் நம்அன்னை
உற்றஅரசிழந்து உரிமை பெருமை குன்றி
உள்ளம் வருந்தினதால் பிள்ளைகள் சிர்குலைந்தோம் (திரு)

அன்னையை மீட்டும்அவள் அரியணை மீதிருத்தி
அகிலம் முழுதும்அவள் மகிமை விளங்கச்செய்வோம்
முன்னைப் பெருமை வந்து இன்னும் புதுமை பெற்று
முத்தமிழ்ச் செல்வியவள் சித்தம் குளிர்ந்திடவே (திரு)

தாயின் மனம் குளிர்ந்தால் தவம் அதுவே நமக்கு
தாரணி தன்னில் நம்மை யாரினிமேல் இகழ்வார்
நோயும் நொடியும் விட்டு நுண்ணறிவோடு நல்ல
நூலும்கலைகளெல்லாம்மேலும்மேலும்வளர்ப்போம் (திரு)

# கைத்தொழில்

கைத்தொழில் ஒன்றைக் கற்றுக்கொள்
கவலை உனக்கில்லை ஒத்துக்கொள்
எத்தொழில் எதுவும் தெரியாமல்
இருந்திடல் உனக்கே சரியாமோ (கை)

உழவும் தொழிலும் இல்லாமல்
உலகில் ஒன்றும் செல்லாது
விழவும் கலையும் விருந்துகளும்
வேறுள இன்பமும் இருந்திடுமோ (கை)

காட்டிலும் மேட்டிலும் களைப்போடு
கஷ்டப் படுவோர் உழைப்பின்றி
வீட்டினில் சாதம் வெந்திடுமோ
வேறெதும் உணவைத் தந்திடுமோ (கை)

நெசவுக் காரர்கள் நெய்யாமல்
நிலத்தவர் உடைக்கென் செய்வார்கள்
குசவன் செய்திடும் பாண்டமன்றோ
குடித்தனம் நடந்திட வேண்டுமென்றும் (கை)

கொல்லரும் தச்சரும் கூடாமல்
கூடமும் மாடமும் வீடாமோ
கல்லடி சிற்பியும் தச்சருமே
காரியம் பலவினுக் கச்சாணி (கை)

## தமிழன் இதயம்

சலவை சவரம் செய்தாலும்
சாக்கடை கழுவுதல் எய்தாலும்
உலகுக் கதனால் உபகாரம்
ஒன்றும் தெரியார் வெறும்பாரம் (கை)

வேந்தர்கள் வரிப்பணம் வாங்குவதும்
வீரர்கள் வெற்றிகள் தாங்குவதும்
மாந்தர்கள் செய்யும் எத்தொழிலும்
மண்ணிற் சிறப்பது கைத்தொழிலால் (கை)

எந்திர வேலைகள் சிறந்திடவும்
ஏற்றவன் கைத்தொழில் தெரிந்தவனே
மந்திரத் தாலெதும் வந்திடுமோ
மனிதன் செய்தது எந்திரமும் (கை)

வேலையில் லாதவர் திண்டாட்டம்
விளைத்திடும் கலகக் கொண்டாட்டம்
ஆலைகள் எந்திரச் சாலைகளால்
அதிகப் படுவதை அறிவோமே (கை)

கைத்தொழில் காத்திடும் ஒருநாடே
கலகம் குறைந்துள திருநாடாம்
எத்தனைக் கெத்தனை எந்திரமோ
அத்தனைக் கத்தனை தொந்தரவே (கை)

கைத்தொழில் தம்மைக் காத்திடுவோம்
கலகம் பற்பல தீர்த்திடுவோம்
பொய்த்தொழில் யாவும் குறைந்திடவே
பூமியில் நாமே சிறந்திடுவோம் (கை)

ஏழை செல்வன் என்றுவரும்
எல்லாப் பிணக்கும் நின்றுவிடும்
வாழிய வாழிய கைத்தொழில்கள்
வாழிய நித்திய சத்தியமும் (கை)

# உலக சமாதானம்

கைத்தொழில் தங்களை மெத்தவும் பரிவுடன்
காப்பது நம்முடைக் கடனாகும்
எத்தனை ஏழையின் நித்தியஜீவனம்!
எண்ணுவதே வெகு புண்ணியமாம்! (கை)

கைத்தொழில் குறைந்தது பொய்த்தொழில் நிறைந்தது
கஷ்டங்கள் யாவையும் அதனாலே
எத்திசை எங்கணும் யுத்த மென்றுரைப்பதும்
எதனால் என்பதை எண்ணிப்பார். (கை)

எந்திரம் புகுந்தது தந்திரம் இருந்தது
ஏழைகள் பிழைத்திட வழியில்லை
மைந்தர்கள் வேலையை எந்திரம் செய்திட
மக்களின் வேலை மனத்தாபம். (கை)

எந்திரம் குவித்திடும் அந்தமில் சரக்கினை
எங்கே விற்பது என்பதற்கே
சொந்தமல் லாப்பிற நாடுகள் மேற்படை
தொடுப்பதும் பிடிப்பதும் நடப்பனபார். (கை)

ஆலையும் எந்திரச் சாலையும் வந்ததில்
ஆயிரம் ஆயிரம் தொழிலாளர்
வேலைகள் போனவர் ஓலமிட் டலைந்திடும்
வேதனை தினந்தினம் விரிவாச்சு. (கை)

ஆலைகள் மறுத்தலும் வேலைகள் நிறுத்தமும்
அங்கே அடைந்திடும் தொழிலாளர்
சாலையை வளைப்பதும் சங்கடம் விளைப்பதும்
சத்தியம் கைத்தொழில் குறைந்ததனால். (கை)

ஆதலினால்ஒரு போதனை கொள்வாய்
அன்புரை இன்பத் தமிழ்மகனே!
வேதனைகள்பல போதலை விரும்பிடில்
விதியெனக் கைத்தொழில் விருத்திசெய்வாய். (கை)

பற்பல பொருள்களை அற்புத யந்திரம்
படைப்பதைத் தடுப்பது பழியெனினும்
சிற்சில பொருள்களை முற்றிலும் கையால்
செய்திடச் சட்டம் செய்திடுவாய். (கை)

சோறும் துணியும் யாரும் இனிமேல்
அத்தமும் கைத்தொழில் பொருள் வாங்கக்
கூறும் சட்டக் கட்டளை யின்றேல்
கொடுமையும் பஞ்சமும் குறையாது. (கை)

பஞ்சம் குறைந்திட வஞ்சம் மறைந்திட
பட்டினி கிடப்பவர் இல்லாமல்
அஞ்சும்படிபல ஆயிரம் ஜனங்களை
ஆலையில் அடைப்பதை அளவாக்கும். (கை)

# சுகாதாரம்

நூறென்று மனிதர்க்கு நீ தந்த வயசினில்
கூறென்று பலநோய்கள் பங்கிட்டுக்கொள்ளுதயோ!
ஆறெம்மைக் காப்பவர் அன்னையே உன்னையன்றி
பாரெம்மைக் கடைக்கண்ணால் தேவிபராசக்தி!

நீதந்த உடல்கொண்டு நின்புகழ் துதிக்குமுன்
நோய்வந்து புகுந்தெம்மை நொடிக்குள் மடிப்பதென்றால்
தாய்தந்தை நீயன்றி தஞ்சம்பிறி துமுண்டோ
வாய்தந்து வாவென்று வரமருள்வாய் தேவீ!

தாயை மறந்திருக்கும் குழந்தைகள் ஸகஜந்தான் ;
சேயை மறந்தவளைச் செகமின்னுங் கண்டதில்லை.
நீயே எமைமறந்தால் நிலையெமக்கேது வேறே
நோயேமிகநலிய நொந்தனம், வந்தருள்.

நித்தம் உனை நினைந்து நியமமுடன் வசிக்க
சுத்தமனநிலையும் சொல்லும் செயலும்தந்து
சுற்றும் பலபிணிகள் தொடரா தருள்புரியாய்
சத்தியமாய் விளங்கும் தேவீ பராசக்தி!

# மக்கட் செல்வம்

பெற்றிடும் செல்வத் தெல்லாம் பெரியது மக்கட் செல்வம்
உற்றிடும் இன்பத் தெல்லாம் உயர்ந்தது மக்க ளின்பம்
மற்றிதை உலகி லெந்த மனிதனும் மறுக்கொ ணாது
சற்றதை மதித்து நாமும் சரிவர நடப்போ மாக.

சிறந்திடும் இன்ப மான சிசுவது நமக்கு வந்து
பிறந்திடு முன்னும் பின்னும் நாம்செய்யும் பிழைக ளாலே
அருந்தவக் குழந்தை யின்பம் அனுபவிப் பதற்கு முன்னல்
இறந்திடும் அதனைப் போல இன்னொரு துன்பமுண்டோ?

உருவினிற் குறைந்த தென்றும் உடல்மிக மெலிந்த
தென்றும்
அறிவினிற் குறைந்த தென்றும் அழகினை யிழந்த
தென்றும்
பிறவியின் குறைக ளெல்லாம் பெற்றவர் குற்றத்தாலே
கருவினில் அமைந்த தல்லாற் கடவுளின் குற்ற
முண்டோ?

விதிவிலக் கறிந்து வாழ்ந்து விமலனை மனத்து ளெண்ணி
மதியினைக் கொண்டு சுத்த மார்க்கத்தில் நின்றுநாமும்
புதல்வரைப் பெற்றுமற்றும் புத்தியாய் வளர்ப்போமானல்
இதமுற வந்த மக்கள் இளமையில் இறப்பதுண்டோ?

வித்தினைப் போற்றித் தூவும் விளைநிலம் பழுது பார்த்து
சுற்றிடும் மிருகவாசை தடைத்திடா வேலி சுற்றி
பத்தியிற் காத்துப் பண்ணைப் பயிரது செய்து விட்டால்
சொத்தையாய்ச் சோலை யாகத்தோன்றுமோ
செந்நெல் சொல்வாய்.

# கர்ப்பிணிகளை நடத்தும் முறை

## பல்லவி

கர்ப்பிணிப்பெண்டுகளைக் கருணையுடன் மிகவும்
கவனிக்கவேண்டுவமே

## அனுபல்லவி

அற்பமென்றவர்களை அசட்டைசெய்வீரெனில்
ஆண்டவன் சாபமுண்டு

## சரணங்கள்

கொஞ்சும் மொழிகள் சொல்லிக்கோதையிளங்கொடியைக்
குதூகலப்படுத்தி வைப்பீர்
அஞ்சும் படிக்குச்செய்து அடிப்பதும் திட்டுவதும்
ஐயையோ ஆகாது. (கர்)

குற்றங்கள் செய்திடினும் முற்றும் மனம்பொறுத்துக்
குணமுடன் வார்த்தை சொல்வீர்
சற்றும் அவர்மனதில் சஞ்சலமொன்றுமின்றி
சந்தோஷம் புரிவீர். (கர்)

நல்லகதைகள் தினம் சொல்லியவர்மனதை
நயம்படச் செய்து வைப்பீர்
அல்லும்பகலும் அவர் ஆண்டவனைத் துதித்து
அறஞ்செய வரந்தருவார். (கர்)

# கர்ப்பிணிக்குப் பூ முடித்தல்

கல்லினுட்சிறு தேரையோடு
கருவிலேவளர் யாவையும்
எல்லையில்பல ஜீவகோடியை
எங்குமாய்நின்று காத்திடும்
வல்லவெம்பெரு மானருளினால்
வஞ்சியேபிள்ளை யாண்டனை
நல்லபூமுகை சூட்டுவோமந்த
நா தனுந்தனைக் காக்கவே.

மல்லிகை நல்ல முல்லையாதிய
வெள்ளையாமலர் சூட்டுவோம்
சொல்லுமன்னவை வெண்மைபோல நீ
சுத்தமாயிரு நித்தமும்
பல்லுமுந்தன் படுக்கையோடின்னும்
பாவையே உந்தன் யாவையும்
நல்லவெள்ளை யெனச்சொல்லும்படி
நாளும் வைத்திடவேண்டியே

வாடினாலும் வதங்கினாலும் தம்
வாடைவீசுதல் வாடிடா
நாடியேமரு காமருக்கொழுந்
தோடுநன்மகிழ் சூட்டுவோம்
பாடுநீமிகப் பட்டபோதிலும்
பக்தியோடிரு நித்தமும்
தேடியே உன்னைத் தேவன் வந்தருள்
செய்குவான் பயமில்லையே

## தமிழன் இதயம்

தொட்டபோதிலும் சற்றுவாடிடும்
சொல்லொணுமிக மெல்லிது
இஷ்டமாகவே யாருமாசைகொள்
இன்பரோஜா இம்மலர்
கஷ்டமாகிய வேலையொன்றையும்
கட்டி நீசெயல் விட்டிடு
நுட்பமாகிய உந்தன் மேனியும்
நொந்திடில் துயர் தந்திடும்

நீளுமாமலர்த் தாழையோடு
நிறைந்த மாமரச் சம்பகம்
சூழும்நல்ல மண மிகுந்தவை
சுந்தரிக்கிவை சூட்டுவோம்
வாழுமந்த வனமுழுவதும்
வாடையோடியு லாவல்போல்
நாளும்நீஉந்தன் வீடிலெங்கும்
நடந்துலாவுதல் வேண்டியே

சேற்றில்நின்று வளர்ந்து நீரினிற்
சேர்ந்திருப்பினும் தாமரை
சாற்றுமோரள வுக்குமீறிடத்
தானருந்துமோ நீரினை
சோற்றின்மூழ்கி யிருந்தபோதிலும்
சொற்பமாகவே சுத்தமாய்ப்
போற்றியுண்ணுதல் வேண்டுமென்றந்தப்
பூமுடித்தனன் பூவையே.

# கோலாட்டம்

## பல்லவி

கொஞ்சும் கிளிமொழிக் கோதையரே நாம்
கூடியாடுவோம் கோலாட்டம்

## அனுபல்லவி

மிஞ்சும் பலவித நோய்களைத் தடுத்திட
மெல்லியலே வழி சொல்லிடுவோம்.

## சரணம்

நோய்கள் மிகுந்தது எதனாலேயென்று
நுண்ணறிவோடதை எண்ணிடுவோம்
தாய்கள் குழந்தையை வளர்த்திடும் வழிகளைச்
சரிவரச் செய்திடத் தெரிவதில்லை. (கொ)

பிஞ்சில் வெதும்பிய காய்கறியென்றும்
பெரிதாய்ச் செழித்ததைக் கண்டதுண்டோ
அஞ்சில் கெட்டது அம்பது வயதிலும்
அழியா திருப்பினும் செழியாது. (கொ)

தாயுந்தந்தையும் தவறுசெய்தாலது
தனயரைச் சேர்வது பொய்யாமோ
சேயைச் சிசுவினில் கவனிக்கா விடில்
சென்மத்தால் வரும் நன்மையுண்டோ (கொ)

கருவில் வளர்ப்பார் கடவுள் பூமியைக்
கண்டபின் வளர்ப்பது நாமன்றோ
அறிவின்நாமதை அறிந்தே வளர்த்திடில்
ஆயுள் நீண்டிடு நோயுமில்லை. (சொ)

விதியாற்சாவது இருந்தாலும்பல
வீணய்ச்சாவதும் உண்டென்றும்
மதியால்நாமதை மாற்றிடலாமென்ற
மாமுனியவர்மொழி இகழாதே. (கொ)

# முறையீடு

உலகினிற் சிறந்ததென்றும்
உருவினிற் பரந்ததென்றும்
உயர்தவ யோகர்சித்தர்
ஒப்பிலார் இருந்ததென்றும்
பலவளம் நிறைந்ததென்றும்
பகுத்தறி வுயர்ந்ததென்றும்
படித்தனம் கேட்டோமந்தப்
பாரத தேசமக்கள்
புலைபுல வென்றுநித்தம்
புதுப்புது நோய்களாலே
புழுக்கள்போல் விழுந்துமாண்டு
போவதைக் கண்டோமையோ!
விலகிட வழிதேடாமல்
விலங்கினம் போலவாழ்ந்து
விதியென வாதம்பேசி
வீணராயிருந்தால் நன்றோ?

கற்பமும் அறிந்துகாய
சித்தியும் கற்றமேலோர்
பற்பலர் இருந்த இந்தப்
பாரத தேசமக்கள்
அற்பமாய் ஆயுள்குன்றி
அழிந்திடல் ஏனென்று
சொற்பனந்தன்னிற்கூட
எண்ணிடத் துணிந்தோமில்லை

உடல்வலி மிகுந்துநல்ல
ஊக்கமும் உறுதிபொங்க
உலகினில் இன்பமெல்லாம்
உயர்வழி அனுபவித்த
திடமுள தீரவீரர்
திகழ்ந்த இச் சிறந்தநாட்டில்
சிறியதோர் நோய் வந்தாலும்
தாங்கிடத் திறனில்லாமல்
நடைப்பிணம் போலநாமும்
நாள்கழித் திருந்தோமையோ !

நாடிலோம் இதனைமாற்ற
நல்வழி யென்னவென்று
மடமையோ மதியோ அன்றி
விதியெனும் மயக்கந்தானோ
மாற்றநாம் அல்லவென்றால்
மதியினாற் பயன் தானென்னே !
முற்றிய ஒழுக்கத்தாலும்
முறைதெரி வாழ்க்கையாலும்
பெற்றவர் காணமுன்னாள்
பிள்ளைகள் இறந்ததில்லை
கற்றவர் பெரியோர்நித்தம்
கதைகளிற் சொல்லக்கேட்டோம்
இற்றைநாள் கோடி கோடி
பிறக்குமுன் இறப்பதேனோ !

பிணியிலே பிறந்துநித்தம்
பிணியையே அருந்திப்பொல்லாப்
பிணியிலே வளர்ந்து அந்தப்
பிணியினாற் சாகக்கண்டும்

## தமிழன் இதயம்

அணியிலே ஆடையாலே
அலங்கரித் தோமேயன்றி
அறிவிலா ஆசாரத்தால்
அழகெதும் செய்தோமில்லை
பணியிலும் பணத்திலேயே
சுகமெலாம் இருந்தாற்போல
பழகினோம் நாமேயன்றிப்
பழக்கினோம் மக்கள் தம்மை
துணிவிலோம் தூய்மையில்லோம்
சுசிகர நடத்தையில்லோம்
ஆவச்சூவோம் இனிமேலேனும்
நோய்களும் துடைக்கும் வாழ்க்கை.

பணத்தையே விரும்பியோடி
மணியினைக் கசக்குவார்போல்
பணத்தையே பெரிதென்றெண்ணிச்
சுகத்தினைப் பழித்து வாழ்ந்து
குணத்தையே விலக்குவித்துக்
குரங்கினைக் கொண்டாற்போல
இனத்தையே பிணிகள் வாட்ட
இருந்தனம் அறிவிருந்தும்.

உண்டியில் ஆசைவைத்தோம்
ஒழுக்கமே மறந்துபோனோம்
பெண்டினர் மக்கள் தம்மை
வளர்த்திடும் முறைமைபேணோர்
மண்டையி லெழுத்திதென்று
மயங்கினோம் கர்மந்தன்னை
மண்டின நோய்கள் கூடாமம்
மலிந்திட நலிந்தோமையோ.

# சுகாதாரக் கும்மி

கும்மியடிப்பெண்கள் கும்மியடி குல
தெய்வத்தைக் கும்பிட்டடியுங்கடி
நம்முடை தேசத்தில் நோய்களில்லாமலே
நாடுசெழித்திட வேணுமென்று.

செத்தவர் தம்மை எழுப்பித்தரவல்ல
சித்தரிருந்த திருநாட்டில்
எத்தனையெத்தனை நோய்களினால் மக்கள்
ஈசலைப்போல மடிவதென்ன !

ஈசனளித்த அறிவிருந்தும் நல்ல
இயற்கை விதிகளை விட்டுவிட்டு
மோசமிகுந்தப் பகட்டுடை வாழ்க்கையில்
மோகம்வைத்தே இந்த மோசமுற்றோம்.

சுத்த உணவிலும் சுத்த உடையிலும்
சொன்னவிதிகளை விட்டுவிட்டோம்
நித்தங்குளிப்பதும் பத்தியங்காப்பதும்
மெத்தக் குறைந்தது தேசத்திலே.

காலையிலெழுந்து நீராடல்கொஞ்சம்
கர்த்தனையெண்ணித் துதிபாடல்
மாலையிலோடி விளையாடல் இந்த
மார்க்கத்தைவிட்டனர் மக்களெல்லாம்

## தமிழன் இதயம்

அளவையறிந்து புசிப்பதில்லை தங்கள்
அளவையளந்து வசிப்பதில்லை
களவுக்கும்பின்னால் கதவை அடைப்பவர்
காரியம் போலடி கண்மணியே

நல்வழக்கங்கள் உள்ளவர் தங்களை
நாடுமோ நோவுகள் எந்நாளும்
நல்வழக்கங்கள் நாளும் வளர்த்திட
நாடுசெழித்திட வேணுமடி

# வாழ்க ! வாழ்க !!

வாழ்க வாழ்க உலகெலாம்
வாழ்க எங்கள் தேசமும்

வாழ்க எங்கள் தமிழகம்
வாழ்க எங்கள் மனையறம்

வாழ்க மேழிச் செல்வமே
வளர்க நாட்டுக் கைத்தொழில்

வாழ்க எங்கள் வாணிபம்
வாழ்க நல்ல அரசியல்

அன்புகொண்டு அனைவரும்
அச்சமின்றி வாழ்கவே

துன்பமேது மின்றிநம்
துக்கம் யாவும் நீங்கியே

இன்பமான யாவுமெய்தி
இந்தநாட்டில் யாவரும்

தெம்பினோடு தெளிவுபெற்றுத்
தேவர்போற்ற வாழ்குவோம்.

---